அருண்
ஐஸ்க்ரீம்ஸ்

# டபுள் ஹிட்




## எதையும் மறக்கச் செய்யும் இந்திர ஜாலம்!

அதில் உள்ள சாக்லேட், முந்திரி, காரமெல் மற்றும் சுவைமிகு ஐஸ்க்ரீமினை நீங்கள் சுவைத்திட சுவைத்திட அறிந்திடுவீர் டபுள்ஹிட்டின் இந்திர ஜாலத்தை!

பெற்றிடுங்கள் இன்றே!
சுவைத்திடுங்கள் இன்றே!

யம்-யம் சிக்கி யம்-யம்

Trikaya Grey MAS. HF. 31.95

# “சன் மூவியில் ஆபாசப் பாடல்களா? சென்சாரைப் பிடியுங்கள்!”

தமிழ்சினிமாவின் கமர்ஷியல் சீரழிவுகள் பற்றியும் ஆபாசப் பாடல்கள் பற்றியும் மாட்டுகிற சினிமாக்காரர்களிடமெல்லாம் ‘நேருக்கு நேர்’ வினாகுகிறார் சன் டீ.வி. ரபி பெர்னாட்.

ஆனால், புதிதாக ஆரம்பிக்கப் பட்டுள்ள சன் ம்யூஸிக் சானலின் இரு பத்தியொரு மணி நேரப் பாடல் புரட்சி யில் எத்தனை ஆபாசப் பாடல்கள்? ‘குட்டிப் பாடல்’ என்று அறிவித்து விட்டு, ‘ஏகுட்டி முன்னால நீ, பின்னால நான்....’ என்று அலற விடுவதும் தேடிப் பிடித்து ஆபாச அசைவுகளை அரங்கேற்றுவதும் எவ்வகை நியாயம்?

சன் டீ.வி. இயக்குநர் கலாநிதி மாற னிடம் கேட்டோம்.

“ஒரு விஷயத்தை முதலில் சொல்லி விடு கிறேன். ரபி பெர்னாடின் நிகழ்ச்சி, அவரது பிரத்யேக விஷயம். அவரது கேள்விகள், சன் டீ.வியின் கேள்விகள் அல்ல. அவரது ‘நேருக்கு நேர்’ நிகழ்ச்சியை நாங்கள் ‘எடிட்’ பண்ணுவது கூட இல்லை. முழுசுதந்திரத் துடன் அவரது நிகழ்ச்சியை மட்டும் அனு மதிக்கிறோம். இப்படிச் சொல்வது உங்கள் குற்றச்சாட்டிலிருந்து தப்பித்துக் கொள்வதற் காக அல்ல. அஃப்கோர்ஸ், சன் டீ.வியின் இயக்குநர் என்ற முறையில், நிகழ்ச்சிகளின் நிறை குறைகளுக்கு நான் முழுப் பொறுப்பு ஏற்றுத்தான் ஆக வேண்டும்.

“ஆனால், சன் ம்யூஸிக் சானல் ஆரம்பிக் கப்பட்டிருப்பது வெறும் தமிழ் சினிமாப் பாடல்களுக்காக அல்ல! இந்த வார இறுதி யில் எங்கள் குழு தமிழ்நாடு முழுக்க சுற்றுப் பயணம் கிளம்புகிறது. நமது கிராமப்புறங் களில், மூலை முடுக்குகளிலிருக்கும் இசைக் கலைஞர்களையெல்லாம் தேடிப் பிடித்து அழைத்து வரப் போகிறோம்.

“கிராமிய இசை, கர்நாடக இசை, நாடோடிப் பாடல்கள், மேற்கத்திய இசை, இந்துஸ்தானி - இப்படி இசையின் அத் தனை வடிவங்களையும் எங்கள் ம்யூஸிக் சானல் தரப்போகிறது!

“V சானலையும் எம்.டீவி.யை யும் பாருங்கள். சினிமாப் பாடல் களா அவர்கள் தருகிறார்கள்? திறமை வாய்ந்த இசைக் குழுக் களைத் தேடி, அவர்களையே பாடவைத்துப் படம் பிடிக்கப் போகிறோம். அப்போது சன் ம்யூஸிக்கில் சினிமாப் பாடல் களின் ஆதிக்கம் என்பது முற்றிலும் குறைந்து விடும்.

இப்போதுதான் எங்கள் வேலை தொடங் கியிருக்கிறது. நிகழ்ச்சிகள் தயாராகும் வரை சினிமாப் பாடல்கள் தொடர்ந்து வருவது தவிர்க்க முடியாததாகிறது.

“உங்கள் கேள்வி, பாடல்களில் ஆபாசம் பற்றியதல்லவா? அதற்கு நாங்கள் என்ன செய்ய முடியும்? சென்ஸார் போர்டு அனு மதித்த பாடல்கள்தானே அவை? அவர்கள் சென்ஸாரைப் பிடியுங்கள்!”

“போகட்டும். முழு நீள இசை சானல், முழுநீள சினிமா சானல்... அடுத்த முழுநீள திட்டம் ஏதாவது...?”

“உண்டு. கூடிய விரைவில் முழுநீள - 24 மணி நேர செய்தி சானல் ஆரம்பிக்கப் போகிறோம்! இது உபயோகமான விஷயம் தானே! எங்கே, பாராட்டுங்கள்!”

“பி.பி.ஸி. போலவா?”

“பி.பி.ஸி. மாதிரியும் இருக்கலாம். பி.பி.ஸி யோடு இணைந்து தொடங்குவதாகவும் இருக்கலாம். கொஞ்ச நாளில் தெரிந்து விடும்!”

சந்திப்பு : **கிச்சா**

படம் :

**கேமரா திருஞானம்**



# "என் உடன்பிறவா சகோதரி!"

**தரணி புகழும் தமிழ் மாநிலத்தில் ஒரே ஒரு "உடன்பிறவா ஜோடி"தானா இருக்க முடியும்? அரசியல் அது இதென்று வம்பு ஏதும் இல்லாத சில 'அப்பிராணி' உடன்பிறவா சகோதரி களைத் தேடிப் பிடித்து "எப்படி இவரை உங்கள் உடன்பிறவா சகோதரி என்பீர்கள்?" என்று கேட்டோம். (Enforcement Directorate அதிகாரிகள் இதை ஒரு பொருட்டாகக் கருதத் தேவையில்லை.)**

## பத்மினி - உமா :

"ஏழாங்கிளாஸிலிருந்து ஒன்றாக இருக்கிறோம். ஒரே ஒரு குறிப்பிட்ட காரணத்தால் உடன்பிறவா சகோதரி என்று உமாவை எப்படிச் சொல்ல முடியும்? எங்கள் நட்பு, வரையறைகளுக்கு அப்பாற்பட்டது" என்றார் பத்மினி. (அட்டைப்படம்.)

"ஒரு சம்பவம் ஞாபகம் வருகிறது. உயர்நிலைப் பள்ளி வகுப்புகளில் நாங்கள் ஒரே கிளாஸ். ஒரே பெஞ்ச். அருகருகேதான் அமர்வோம். ஆனால் ஹையர் செகண்டரி போன போது பத்மினி முதல் குரூப்பிலும் நான் மூன்றாம் குரூப்பிலுமாகப் பிரிந்து விட்டோம்.

"என்னால் கிளாஸில் உட்காரவே முடியவில்லை. எழுந்து இவள் கிளாஸுக்கு வந்து உட்கார்ந்துவிட்டேன். கொஞ்ச நாள் அட்டென்டன்ஸில் பெயரே இல்லாமல் சயன்ஸ் குரூப்பில் இருந்துவிட்டு, பிறகு ஹெட்மாஸ்டரிடம் கேட்டு நானும் பத்மினி கிளாஸுக்கே மாறிவிட்டேன்!" என்றார் உமா.

"நல்ல ஜோக். ஏன் அப்படி...?"

"தெரியவில்லை. ஒன்றாகவே ஸ்கூலுக்குப் போவோம். ஒரே மாதிரி ட்ரெஸ் எடுப்போம். எங்கள் ரசனையும் ஒரே மாதிரி அமைந்துவிட்டது. எப்படி? ஏன்? அதுதான் புரியவில்லை" - இது பத்மினி.

இவர்கள் நிஜமாகவே உடன்பிறவா சகோதரிகள்தான் என்று நாம் நம்பி ஆக வேண்டியதற்கான ஒரு விஷயத்தை இருவருமே சொன்னார்கள் :

"எங்கள் இரண்டு பேருக்குமே ஒரே சமயத்தில் கல்யாணம் பிக்ஸ் ஆகி ஒரே நாளில் நிச்சயதார்த்தம்! (19.5.95) நேரம் கூட இருவருக்குமே மாலை 4 தான்! என் நிச்சயதார்த்தத்துக்கு அவள் வரமுடியாது; அவளுடையதற்கு நான் போக முடியாது... இதுதான் வருத்தமாக இருந்தது!"

பத்மினி சொன்னார்: "இன்னொரு ஒற்றுமை பாருங்கள். ரெண்டு பேருடைய உட்-பியும் சரியான ஞானப் பழங்கள்!"

## சுதா - காயத்ரி

"ஒரே கட்டடத்தில் உள்ள ஃப்ளாட்களில் வசிக்கிறோம். பன்னிரெண்டாம் வகுப்புத் தேர்வுக்கு சேர்ந்து தயார் செய்தோம். அப்போது அதிக நேரம் ஒன்றாகச் செலவிட்டதில் நட்பு வளர்ந்தது. இன்று அது ஈருடல் ஒருயிர் ஸ்டேஜுக்கு வந்துவிட்டது. மனத்தில் பட்டதையெல்லாம் மறைக்காமல் பகிர்ந்து கொள்ளும் பழக்கம் எங்களுக்கிடையே இருப்பதால் தொடக்கத்தில் சின்னச் சின்ன தகராறுகளுக்கெல்லாம் குறைவேயிருக்காது. என்றாலும் சீக்கிரத்திலேயே நெருங்கிய தோழிகளாகி விட்டோம்" என்ற சுதா,

"ஒருமுறை காயத்ரி விடுமுறையின் போது பம்பாய் சென்றிருந்தாள். மிக அதிக நாட்கள் அவளைப் பிரிந்து இருந்தது அப்போதுதான் - சுமார் பதினைந்து நாட்கள்! எதையோ பறிகொடுத்தது போல் உணர்ந்தேன். ஒருநாள் நான் எவ்வளவு கட்டுப்படுத்தியும் நிற்காது கண்ணீர் வழிந்து கொண்டேயிருந்தது! என் வாழ்க்கையில் அவளுக்கு எவ்வளவு முக்கிய பங்கு என்பதை மேலும் அழுத்தமாக உணர்த்திய சம்பவம் அது! காயத்ரிக்கும் அவளது அம்மாவுக்கும் ஏதாவது சிறு கருத்து வேறுபாடுகள் ஏற்படும் போது, அது உடனே எனக்குத் தெரிந்து விடும். காயத்ரிக்கு சாதகமாக அவளது அம்மாவிடம் வாதம் செய்வேன்."

காயத்ரி சொன்னார், "நான் ரொம்ப ரிசர்வ்ட் டைப். ரொம்ப எமோஷனலும் கூட. சுதாவின் நட்புக்குப் பிறகு எதையுமே வித்தியாசமான கோணங்களில் பார்க்க

முடிந்தது. என் குணநலன்களில் விரும்பத் தக்க மாற்றங்கள் உண்டாயின.

"ஒரு சம்பவம் பாருங்கள். பூச்சிகளைக் கண்டால் எனக்கு பயங்கர அலர்ஜி. கரப்பான்பூச்சி மட்டுமல்ல... கண்ணுக்குத் தெரிகிற எந்த பூச்சியானாலும் சரி... அருவருப்பு.



• காயத்ரி - சுதா

பயம்... அலறி விடுவேன். எனது இந்த குணத்தை மாற்றவே முடியவில்லை. சுதா தான் ஒருநாள் என்னிடம் இது பற்றிப் பேசினாள். எதற்காக பயப்பட வேண்டும்? பூச்சிகளால் நமக்குத் தொந்தரவு ஏதும் இல்லை. கடித்து விடுமோ, உயிர் போய் விடுமோ என்கிற பயம் அபத்தமானது. அறிவியல்பூர்வமாக பூச்சிகளின் இயல்பு, சாதுத் தன்மை பற்றியெல்லாம் ஒரு குழந்தைக்கு போதிப்பது போல் சொல்லித் தந்தாள். இப்போது ரொம்பத் தெளிவாகி விட்டேன்! கரப்பான்பூச்சியோடு கைகோத்து முக்கா புலா ஆடாத குறை!"

## வத்சலா - சித்ரா

"எங்களது சென்னை அலுவலகத்தில் நான் நுழைந்த போது மதியம் தனியாகச் சாப்பிட வேண்டிய நிலை. சரியான கம்பெனி இல்லை. அப்போது விடுமுறையில் இருந்த சித்ரா சில நாட்கள் கழித்து அலுவலகம் வந்த போது நான் தனியாகச் சாப்பிடுவதை அறிந்து என்னுடன் சேர்ந்து கொண்டாள். தற்செயலாக எங்களை ஒரே பிரிவில் அடுத்தடுத்த இருக்கைகளில் போட்டு விட, பேச்சும் நட்பும் அதிகமாயின. தபாலாபீசிலிருந்து கடைகள் வரை சேர்ந்து போகத் தொடங்கினோம். அலுவலகத்தில் தினமும் ஒரு கப் டீ வாங்கி அதை 50-50 யாகப் பகிர்ந்து கொள்ளத் தொடங்கினோம். கேரம், டேபிள் டென்னிஸ் ஆகிய விளையாட்டுக்களில் இருவருக்குமே ஆர்வம் உண்டு. போட்டிகளின் போது இவற்றில் நாங்கள்தான் பார்ட்னர்களாக இருப்போம். குறிப்பிட்ட சம்பவங்கள் எங்கள் நட்பை இறுக்கியது என்பதை விட, மேலே குறிப்பிட்ட சந்தர்ப்ப சூழல்கள் எங்களை உடன் பிறவா சகோதரிகளாக்கியது எனலாம்! தேவைப்படும் போது எந்தவித உதவியையும் ஒருவருக்கொருவர் செய்து கொள்ளத் தயங்கியதில்லை. பட்டியல் போட்டுக் காணாது! அலுவலகத்தில் எங்களை 'லாரல்-ஹார்டி' என்று



• சித்ரா - வத்சலா

அழைக்கத் தொடங்கினார்கள். அவள் ஒல்லியாக லாரல் போல் இருப்பதால், நான் அவளை விட பருமனாக இருக்கும் ஒரே காரணத்துக்காக ஹார்டியாக ஆக்கப்பட்டு விட்டேன்!

"என்னை இப்போது வேறு கிளைக்கு மாற்றி விட்டார்கள். என்றாலும் தினமும் சந்திக்கிறோம் - நேரில் முடியாத போது, கிரஹாம் பெல்லின் கண்டுபிடிப்பின் மூலமாகவாவது."

**— கிச்சா, குல்லு.**

மேலட்டை வண்ணப்படம், படங்கள் :
**கேமரா திருஞானம்**

**சென்ற இதழில் வெளியான 'பொது சிவில் சட்டம்' பற்றிய லத்தீஃப் பேட்டியின் தொடர்ச்சி இக் கட்டுரை. ஓய்வு பெற்ற உயர்நீதிமன்ற நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டியார் பொது சிவில் சட்டத்தின் அவசியத்தைக் கடுமையாக வலியுறுத்துகிறார்:**

நமது அரசியல் சாசனத்தின் முன்னுரையில் ஒவ்வொரு இந்தியக் குடிமகனுக்கும் சமூக - பொருளாதார - அரசியல் நீதி கிடைக்க அரசு ஆவன செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏற்றத் தாழ்வற்ற சமுதாயத்தில்தான் இது சாத்தியமாகும். அப்படியொரு சமுதாயம் எப்படி வரும்? அதற்குத்தான் பிரிவு எண் 44ல் அனைவருக்கும் பொதுவான சிவில் சட்டம் தேவை என்று சொல்லப்பட்டு, அதைக் கொண்டு வர அரசு முயற்சி செய்ய வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

'தனித்தனியாக சிவில் சட்டங்கள் இருப்பதால்தான் ஏற்றத் தாழ்வுகள் இருக்கிறதா?' என்ற கேள்விக்கு 'ஆமாம்' என்பதுதான் பதில். திருமணம், சொத்து உரிமை, விவாகரத்து போன்ற தனி மனிதனுடைய முக்கிய விவகாரங்கள் சிவில் சட்டத்தின் அடிப்படையில் வருகின்றன. தனித்தனி சட்டப்படி, வெவ்வேறு மதங்களைச் சேர்ந்த பெண்களுக்குப் பாதுகாப்பற்ற நிலை இருக்கிறது. இது ஏற்றத் தாழ்வு இல்லையா?

முஸ்லிம்களில் பலதார மணம் அனுமதிக்கப்படுகிறது. கிறிஸ்துவர்களில் சில பிரிவினரும் பலதார மணம் கடைப்பிடிக்கிறார்கள். ஆனால் இந்துக்கள், ஒரு பெண்ணை முறைப்படி விவாகரத்து செய்துவிட்டுத் தான் அடுத்த பெண்ணை மணக்க முடியும். அதேபோல் ஜீவனாம்சம். இந்துப் பெண்ணுக்கு உண்டு; முஸ்லிம் பெண்ணுக்குக் கிடையாது. இது ஏற்றத் தாழ்வு இல்லையா? இது பற்றிக் கேட்டால் 'மகர்' கொடுக்கிறோம் என்கிறார்கள். ஒருமுறை பணம் கொடுத்து விட்டால், அதை வைத்துக் கொண்டு பாதிக்கப்பட்ட பெண்மணி வாழ்நாள் முழுவதையும் கடத்தி விட முடியுமா? இதே போல் சொத்துக்களைப் பகிர்ந்தளிப்பதிலும் ஆண், பெண் வித்தியாசம் மட்டுமின்றி குறிப்பிட்ட மதத்தைச் சார்ந்த ஆணோ, பெண்ணோ வேற்று மதத்தினரை மணந்து கொண்டால் சொத்துக்கள் கிடைக்காத நிலையும் இருக்கிறது. இது சரிதானா? ஏற்றத் தாழ்வற்ற சமுதாயம் உருவாக இதுபோன்ற நிலைகள் உதவி செய்யுமா?



இந்துக்கள் மனு தர்ம சாஸ்திரப்படிதான் வாழ வேண்டுமென்று சொன்னார்கள். மனு சாஸ்திரத்தில் பலதார மணம், குழந்தை விவாஹம், உடன்கட்டை ஏறுதல் போன்றவை சொல்லப்பட்டிருக்கின்றன. இன்று இந்து மதத்தில் உள்ளவர்கள் மனுதர்மத்தையா கடைப்பிடிக்கிறார்கள்? காலத்திற்கேற்றபடி மாற்றிக் கொள்ளவில்லையா? இந்துக்கள் திருமணச் சட்டம் codify செய்யப்பட்டு விவாகரத்தும் சட்ட வளாகத்துக்குள் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இந்த மாற்றங்களைக் கொண்டு வரும் போது சாதாரண மக்கள் தவிர, சனாதனவாதிகள் கூட எதிர்ப்புத் தெரிவிக்கவில்லையே! இன்று உலகமே சமதர்ம சமுதாயத்தை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது. இந்த

# பொது சிவில் சட்டம் ரொம்ப ரொம்ப அவசியம்!

நிலையில் மக்களிடம் ஏற்றத் தாழ்வுகளை உண்டாக்கிக் கொண்டிருக்கும் தனித்தனி சிவில் சட்டங்கள் தேவைதானா?

"ஒவ்வொரு குடிமகனுக்கும் ஏற்றத் தாழ்வற்ற குடி உரிமைகள் வழங்கப்பட வேண்டும்" என்று சொல்லும் இந்திய அரசியல் சாசனத்தை எல்லா மதத்தினரும் ஏற்றுக் கொள்ள வேண்டும். இல்லையேல் அரசியல் சட்டத்தை அவமதித்தது போலாகும்.

அரசியல் சட்டத்துக்கு ஜாதி, மதம் கிடையாது. ஆகவே சிவில் உரிமைகளையும் மதத்தையும் போட்டு குழப்பிக் கொள்ள வேண்டாம். ஒவ்வொரு மதத்தினரின் வழிபாட்டு உரிமைகளில் யாரும் தலையிடுவதில்லை. அதோடு சரி! அரசியல் சட்டத்தின் சில ஷரத்துகளில் தனிமனிதனுக்குள்ள வாழும் உரிமை, மதங்களைப் பேணுகிற உரிமை ஆகியவை பற்றிக் குறிப்பிட்டிருக்கின்றன. அவற்றைக் குறிப்பிட்டு 'பொதுவான சிவில் சட்டம் என்று வந்தால், தனி உரிமைகளில் கைவைப்பதாக ஆகுமே' என்று சிலர் வாதிடுகிறார்கள். தனி உரிமைகள் என்று ஏதோ அபரிமிதமாக இருப்பது போலவும், அது வரையறையற்ற உரிமைகள் போலவும் சொல்லிக் கொள்வது சரியல்ல! ஒரு மனிதன் கண்ணியமாக வாழச் சில தனி உரிமைகள் இருக்கின்றன. அந்தத் தனி உரிமைகளில் சமுதாயத்தின் நல்வாழ்வும் உள்ளடங்கி இருக்கிறது. தனி மனிதன் 'உரிமைகள்' என்ற பெயரில் சமுதாயத்திற்குப் பங்கம் ஏற்படும் வகையில் செயல்பட முடியுமா?

'எங்கள் தனிச்சட்டத்தை வேற்று மதத்தினர் தவறாகப் பயன்படுத்துவதால்தான் இதுபோன்ற பிரச்னைகள் உண்டாகின்றன" என்று முஸ்லிம்கள் சொல்கிறார்கள். சரி; அப்படியென்றால் தவறாகப் பயன்படுத்துவதற்கு ஏதுவாகத் தனிச்சட்டம் ஒன்று இருப்பதால்தானே இந்தத் தொல்லை. எல்லோருக்கும் பொதுவான ஒன்று இருந்தால் இந்தப் பிரச்னையெல்லாம் வராதே!

அரசியல் சட்டத்தில் சொல்லப்பட்ட சமூக - பொருளாதார - அரசியல் நீதி கிடைக்க வேண்டுமென்றால், அனைத்து மக்களுக்கும் பொருந்தக்கூடிய பொதுவான சிவில் சட்டத்தைக் கொண்டு வர வேண்டும். அப்போதுதான், ஏற்றத் தாழ்வற்ற, ஜாதி சமயமற்ற ஒரு சமதர்ம சமுதாயம் இந்தியாவில் உருவாகும்!

சந்திப்பு : **ஸ்ரீநிவாசன்**

---

**கான்ஸ்டபிள் :** முப்பது வருட சர்வீஸ்ல இந்த மாதிரி ஒரு புகாரைப் பார்த்ததே இல்லைங்கறீங்களே, அப்படி இவர் என்னதான் புகார் கொடுத்திருக்கிறார் சார்?

**ஹெட் கான்ஸ்டபிள் :** ரெண்டு நாள் வெளியூர் போயிருந்தாராம், மயிலாப்பூர்ல இருந்த அவரோட பங்களாவைக் காணோமாம். கண்டுபிடிச்சுத் தரச் சொல்லிப் புகார் கொடுத்திருக்கிறார்!

- நாகலை இளவல்



# ஒண்டுக் குடித்தனத்தில் ஒரு எம்.எல்.ஏ!

எம்.எல்.ஏ. என்றாலே, ஐந்து வருடங்களுக்கொருமுறைதான் தொகுதிப் பக்கம் தலைகாட்டுவார். வோட்டுக்களைப் பெற்று, தேர்தலுக்குப் பின் தலைமறைவாகி விடுவார் என்ற விளக்கத்தை ஏகமனதாக மக்கள் ஏற்றுக் கொண்டு விட்ட காலம் இது. தமது தொகுதியை ஐந்து பகுதிகளாகப் பிரித்து, ஐந்து நாட்களுக்கொருமுறை ஒரு பகுதி என்ற விகிதத்தில், வீடு வீடாகச் சென்று, "என்ன... சௌக்கியமா? ஏதாவது உதவி தேவையா?" என்று அக்கறையுடன் விசாரிக்கும் ஒருவரை எம்.எல்.ஏ. என்று நம்பவே முடியவில்லையல்லவா!

ஆனால், பம்பாயின் 'மஜகான் டாக்' பகுதியிலிருந்து சிவசேனை எம்.எல்.ஏவாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட "பால நந்தகாவ்கர்" அப்படிப்பட்டவர்தான்.

முன்னறிவிப்புடன் சென்றால் பந்தாவுடன் செயற்கைத்தனமும் கைகோத்து விடுமே என்று நாம் திடீர் விசிட் செய்த போது, படைபதைக்கும் வெயிலில், வியர்வை ஆறாக ஓட, ஒவ்வொரு கட்டடமாகப் புகுந்து புறப்பட்ட காட்சியைக் காண முடிந்தது. "வெற்றி பெற்ற எம்.எல்.ஏவுக்கு மாலை மரியாதைகள் செய்வதுதான் மரபு. இவரோ வித்தியாசமானவராயிற்றே! தமது வெற்றிக்காக பிரதிநிதிகளுக்குச் சால்வை போர்த்தி, மாலை மரியாதைகள் செய்து தமது நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்" என்றார் ஒரு முதியவர்.

மூன்று வருடம் கவுன்சிலராகவும், மூன்று மாதம் எம்.எல்.ஏ. வாகவும் அரசியலில் குப்பை கொட்டிய பின்னரும், இவர் வசிப்பது ஒரு கீழ் நடுத்தர வர்க்கத்துக் குடியிருப்பான, "சாலில்"தான். கையகல அறையில், சமையலுக்கென்று ஒரு தடுப்பு போக, மிஞ்சியிருப்பது இருவர் கால் நீட்டிப் படுக்கக் கூடிய இடமே! பாத்ரூம், டாய்லெட் எல்லாம் அங்குள்ள நூற்றுக்கணக்கான குடித்தனக்காரர்களுக்கும் பொதுவானதே. அறையிலிருந்த ஒரே ஆடம்பரப் பொருள் குட்டியான ஃப்ரிஜ்தான். மற்றபடி உட்காருவதற்கு கூட ஒரே ஒரு மோடாதான்!

இளம் வயதிலேயே பெற்றோரை இழந்து, மூன்று தங்கைகளின் பொறுப்பைச் சுமக்க, ஏர்-இண்டியாவில் செக்யூரிட்டி கார்டாக வேலைக்குச் சேர்ந்தவர், பதினாறு வருட சர்வீசில் ஒரு 'ஆப்செண்ட்' இல்லை. ஒரு லேட் மார்க் இல்லை; அவார்டுகள் வேறு. கணபதி உத்ஸவங்கள் மூலம் சிவசேனையில் வேரூன்றிப் படிப்படியாக வளர்ந்தவர்.

இவரை எதிர்த்து, காங்கிரஸ் சார்பாகப் போட்டியிட்ட சகன் புஜ்பலை 14,000 வோட்டுகள் வித்தியாசத்தில் இவர் தோற்கடித்ததே பெரிய சாதனைதான். முன்பு சிவசேனையின் முதுகெலும்பு என்று பேசப்பட்ட புஜ்பல் திடீரென்று தாக்கரேவுடன் ஏற்பட்ட தகராறில் கட்சிமாறி, பல தொண்டர்களுடன் காங்கிரஸில் இணைந்த போது பால் தாக்கரேவுக்கு முதுகில் தாக்கப்பட்ட வலி. புஜ்பல் காங்கிரஸிலும் செல்வாக்கு பெற்று, ஸ்டேட் ஹவுஸிங் மினிஸ்டராக உயர்ந்த போது, ரணம் அதிகமானது!

மஜகான் பகுதியில் சகன்புஜ்பல்தான் வேட்பாளர் என்று தெரிந்தவுடன், "ஒரு சாதாரண சிவசேனை தொண்டனை நிற்க வைத்து, உன்னைத் தோற்கடிக்கிறேன் பார்" என கொக்கரித்தார் தாக்கரே!

"உண்மையாக உழைப்பவன்" என்பதைத் தவிர வேறு எந்த பெரிய தகுதியுமில்லாத பால நந்தகாவ்கரைத் தேர்ந்தெடுத்த போது "டைம்ஸ் ஆஃப் இந்தியா" கூட, 'வீக் காண்டிடேட்'டை நிற்க வைத்திருக்கிறாரே என கவலைப்பட்டது!

"அவர்கள் 'வீக்' என விமர்சித்ததே, என்னை பலசாலி என்று நிரூபிக்க உசுப்பிவிடும் மகா சக்தியாக அமைந்து விட்டது. வெறியுடன் உழைக்க வைத்தது! 'பாலாவை உட்கார்ந்த இடத்திலிருந்தே, தோற்கடிப்பேன்' என்று அலட்சியமாகப் பேசிய புஜ்பல், பயந்து நடுங்கி, தேர்தல் பிரசாரத்துக்கு சரத்பவாரை கூட்டி வந்தார்; நான்

உடனே பால்தாக்கரே அவர்களை அழைத்தேன். புஜ்பல், வாட்ச், ஃப்ரிஜ், ரொக்கம் என்று மக்களுக்கு 'அன்பளிப்புகள்' வழங்கினார். நான் 'அன்பை' மட்டும் வழங்கி, அவர்களுக்கு உழைப்பதாக வாக்குறுதி அளித்தேன். மக்கள் என் சார்பாகத் தீர்ப்பு வழங்கினர்!'' என்கிறார் மலரும் நினைவுகளில் திளைத்தவாறே.

தம் தொகுதியின் பிரச்னைகள் என்ன என்பதை தெளிவாகப் பட்டியலிட்டு, ஒவ்வொன்றையும் தீர்க்கும் வழிமுறைகளை வகுத்து, அதன்படியே செயல்படவும் செய்கிறார்.

''முதலாவது குடிநீர் பற்றாக்குறை. அடுத்து, 'மில்'கள் மூடியிருப்பதால் ஏற்பட்டுள்ள வேலையின்மை; மூன்றாவது ரேஷன் சரிவரக் கிடைக்காமலிருப்பது; நாலாவது குடிசைவாசிகளுக்குக் கட்டடக் குடியிருப்புகள்; அப்புறம் இந்த பங்களா தேஷிக்காரர்கள் தொல்லை...'' என அடுக்கினார்.

கடைசி விஷயம் பெரிய தலைவலியாகி வருவதை சுட்டிக்காட்டிய போது, ''போலீஸ்காரர்கள் அவர்களை மிரட்டிப் பணம் பறிப்பது கண்டிக்கப்பட வேண்டிய விஷயம் தான். ஆனால் பங்களா தேஷிக்காரர்களைத் திருப்பி அனுப்புவதில் நான் உறுதியாக இருக்கிறேன். நம்மிடமே பசித்த வயிறுகளை வைத்துக் கொண்டு, 'அடுத்த வீட்டுக்காரனுக்குச் சோறு போடுவது எந்த விதத்தில் நியாயம்?'' என்கிறார்.

பிரச்னைகளுக்குத் தாற்காலிகமாக அல்லாமல், அவற்றின் அடி வேரை ஆராய்ந்து நிரந்தரமாகத் தீர்வு காண்பதில் வல்லவர் என்பதற்கு உதாரணமாக, ''கமிஷன் மிகவும் குறைவாக இருப்பதே ரேஷன் கடைக்காரர்கள் பினாக்கில் விற்பதற்கு அடிப்படைக் காரணம். அதனால் அவர்கள் கமிஷனை உயர்த்துவதுதான் நியாயம்'' என்று இவர் குரல் கொடுத்திருப்பதைச் சொல்லலாம்.

''மக்களின் பிரச்னைகளைத் தீர்ப்பதில் மூன்று முறைகள் உண்டு; ஒன்று சிபாரிசுக் கடிதம்; மற்றது தொலைபேசித் தொடர்பு; மூன்றாவது நேரடித் தொடர்பு - நான் இந்த மூன்றையும் ஒருசேரக் கடைப்பிடிப்பதால், என்னை நாடி வருபவர்களுக்கு வெற்றி நிச்சயம்'' என்கிறார்.

மார்வாடி ஒருவரின் பிள்ளைக்கு, டொனேஷன் இல்லாமல் ஸ்கூல் அட்மிஷன் வாங்கித் தந்ததற்கு, இவருக்கு பல ஆயிரம் 'காணிக்கை'யாக அவர் செலுத்த, அதை மறுத்ததன் பயனால், அவரே ஏழைகளுக்குப் பயன்படும் வகையில் ஒரு 'ஆம்புலன்சை' அன்பளிப்பாக அளித்திருக்கிறாராம்.

''பணம் இல்லாமல் அரசியல் பண்ண முடியாது. ஆனால் அதை யாரிடமிருந்து பெறுவது, யாருக்குப் பயன்படுத்துவது என்பதில் தான் நியாயமும் மனித நேயமும் வெளிப்பட வேண்டும். சுயநலமின்றிச் செயல்படுவதே என் குறிக்கோள்'' என்கிறார்.




சிவசேனைக்காரர்களுக்கேயுரிய தாக்கரே பக்தி இவருக்கும் எக்கச்சக்கம். ''உங்கள் தலைவர் விடும் அறிக்கைகள் உங்களைச் சங்கடப்படுத்தியதுண்டா? நீங்கள் எதிர்த்துக் குரல் எழுப்பியதுண்டா?'' என்றதற்கு, ''தாக்கரே எங்களுக்குத் தெய்வம் மாதிரி. தெய்வத்தின் தீர்ப்பில் குறை காண முடியுமா? அதன் தீட்சண்யம் சாமானியர்களுக்குப் புலப்படாதிருக்கலாம், அவ்வளவே!'' என்கிறார் உணர்ச்சி வசப்பட்டு!

— ஜெயஸ்ரீ ராஜ்

# வளம் பெருக்கும் வாஸ்து சாஸ்திரம் - ரூ.50

## (அனுபவ மனையடி நூல்)

ஆசிரியர்: பேராசிரியர், டாக்டர் எம்.பி.ஆர்.எம். இராமசாமி, பொறியாளர்: எம்.ஆர்.எம். முத்துக்குமார்

புது வீடு கட்டி, புதுமனை புகுவிழா நடத்தி புது வீட்டில் குடியேறுவது என்பது மகிழ்ச்சி தரக்கூடியதுதான். அதேசமயம் நம்முடைய ஏற்றத் தாழ்வுகளுக்கு நாம் குடியிருக்கும் வீடுகளும் காரணமாய் அமையும் என்பதையும் மறுப்பதற்கில்லை. எத்தனையோ பேர் கடைக்கால் போட்ட நிலையிலும், பாதி கட்டி முடித்த நிலையிலும் மேற்கொண்டு தொடர முடியாமல் தவிப்பதை நாம் காண்கிறோம். இன்னும் சிலர் குடியேறிய பின்னும் தவிக்கிறார்கள். ஒருசிலர் ஓகோவென்று வாழ்கிறார்கள். கொடிகட்டிப் பறக்கிறார்கள்.

இதற்கெல்லாம் என்ன காரணம்?

வீடுகள் மனையடி சாஸ்திரப்படி அதாவது வாஸ்து சாஸ்திர அடிப்படையில் அமைவதும் அமையாததுமே காரணம் எனலாம்.

நவீன வீடுகளையும் வாஸ்து சாஸ்திரப்படி அமைக்கலாம். எது எதை எங்கெங்கே அமைக்க வேண்டும் என்பதை அறிந்து அமைத்தால் அமோகமாக வாழலாம். செல்வம் செல்வாக்கு பெருகும்; கீர்த்தி புகழ் ஓங்கும். அதற்கு இந்நூல் வழிகாட்டும்.

சொந்த வீட்டுக்காரருக்கு மட்டுமல்ல; குடித்தனக்காரருக்கும் இது பொருந்தும். சாஸ்திரப்படி கட்டப்பெறாத வீடுகளாயின் குடித்தனக் காரர்களும் தொல்லைகளுக்கு ஆளாக வேண்டியதுதான். எனவே தொல்லைக்கு ஆளாகிக் கொண்டிருக்கும் குடித்தனக்காரர்கள் தாங்கள் குடியிருக்கும் வீடு சாஸ்திரப்படி அமைந்துள்ளதா என அறிய இந்நூலின் துணையை நாடுவது நல்லது.

குடித்தனம் செய்பவரானால் வேறு வீடு மாற்றிப் பாருங்கள். சொந்த வீட்டுக்காரரானால் இந்த நூலைக் கையில் வைத்துக் கொண்டு வீட்டு அமைப்பில் சிறு மாறுதல்களைச் செய்து பாருங்கள். உடனே மாற்றங்கள் தோன்ற ஆரம்பிக்கும்.

செல்வம் செழிக்க, கொழிக்க வேண்டிய வீடுகள் எப்படி அமைய வேண்டும், எந்தெந்த அறைகளை எப்படி அமைக்க வேண்டும், எப்படி அமைத்தால் செல்வம் கொழிக்கும் என்பதை இந்நூல் தெளிவாக எடுத்துச் சொல்கிறது.

தனிப்பிரதி வேண்டுவோர் ரூ.50 மட்டும் M.O. மூலம் அனுப்பவும். வி.பி.பி செலவு தனி. புத்தகக் கடைகளிலும் கிடைக்கும்.

# இயற்கை உணவே நோய் தீர்க்கும் மருந்து

**பச்சைக் காய், கனிகள் உண்போம்! பற்பல நோய்களையும் போக்குவோம்!**

**இரண்டாம் பதிப்பு** **விலை ரூ.100**

ஆசிரியர்: இயற்கை உணவு நிபுணர் மூ.ஆ. அப்பன்

(இவர் இயற்கை உணவுச் சித்தர். சிவசைலம் நல வாழ்வு ஆசிரம ஸ்தாபகர், தேங்காய் பழ சுவாமிகளின் பிரதம சீடரும் தம்பியும் ஆவார்)

மருந்து மாத்திரைகள் இல்லாமல், பக்க விளைவுகள், பின் விளைவுகள் இல்லாமல் அறுவை சிகிச்சைகள் இல்லாமல் இயற்கை உணவுகளை அதாவது பச்சைக் காய், கனிகளை மட்டுமே உண்டு நோய் எதுவாயினும் தீர்த்துக் கொள்ள முடியும் என்பதற்கு இந்நூல் ஓர் ஆதாரம்.

ஆசிரியரே ஒரு தொழுநோயாளியாக இருந்து பிணி நீங்கப் பெற்றவர் என்பதே இயற்கை உணவுக் கொள்கைக்கு ஒரு சிறந்த அத்தாட்சியாக அமைகிறது. அவர் தாம் நலமடைந்த விவரத்தையும் மேற்கொண்ட உணவுமுறையையும் நூலில் விளக்குகிறார். எந்தெந்த நோய்க்கு எந்தெந்தக் காய், கனிகள் உண்ண வேண்டுமென்று இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது ஒரு தனிச் சிறப்பாகும்.

புத்தகத்தைப் படிக்கப் படிக்க உண்மைகளை நீங்களே உணருவீர்கள். இன்னும் என்ன யோசனை? எனக்கடா நோய் ஒன்றும் இல்லாதபோது இந்தப் புத்தகத்தை ஏன் வாங்க வேண்டும் என்று நினைக்கிறீர்களா? பிணியாளர்களுக்கு மட்டுமல்ல சார்! உங்களுக்காகவும்தான் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. இயற்கை உணவுகளை - பச்சைக் காய், கனிகளை உண்டு உங்களது, உங்கள் குடும்பத்தாரது ஆரோக்கியத்தை மேம்படுத்திக் கொள்ளக் கூடாதா? நோய் வருமுன் காக்கக் கூடாதா? உங்கள் நலம் கருதி, உங்களுக்காகவே இந்நூல் எழுதப்பட்டுள்ளது. நீங்கள் அன்றாடம் உண்ணும் காய், கனிகளைக் கொண்டே நோய்களை போக்கிக் கொண்டு விடலாம்.

தனிப்பிரதி விரும்புவோர் ரூ.100 மட்டும் M.O. மூலம் அனுப்பவும். வி.பி.பி. செலவு தனி. புத்தகக் கடைகளிலும் கிடைக்கும்.



ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ், 2. முத்துக்கிருஷ்ணன் தெரு. த.பெ.எண். 1040
பாண்டி பஜார், தி.நகர், சென்னை-17. தொலைபேசி: 8281902.

கிடைக்குமிடங்கள்: ● கோயமுத்தூர்: ராஜாமணி ஸ்டோர்ஸ், 137, ராஜவீதி. விஜயா பதிப்பகம், 20, ராஜ வீதி. வசந்தம் ஸ்டோர்ஸ், 53 கிராஸ்கட் ரோடு ● சேலம்: வள்ளுவர் புத்தக நிலையம், 256-A, செரி ரோடு. சந்திரா புக் ஹவுஸ், 5, தேர்வீதி. ஏ.வி.எஸ்.புக் சென்டர், தேர் அருகில். ● மதுரை: சர்வோதய இலக்கியப் பண்ணை, 32/1, மேல வெளி வீதி. மதுரைகண்ட் புக்சென்டர், 11, மேலவெளி வீதி. செந்தில் புக் சென்டர், திரு காலேஜ் ஹவுஸ். செல்வி புக் ஹவுஸ், நேதாஜி ரோடு. ● திருச்சி: காந்தி பப்ளிகேஷன்ஸ், 46-A, வெஸ்டிபுல் ரோடு. இளங்கோ புத்தக நிலையம், 32, வெஸ்டிபுல் ரோடு. ● தஞ்சாவூர்: முரசு புத்தக நிலையம், மணிக்கூண்டு. ● திருநெல்வேலி: எம். ஆறுமுகம் பிள்ளை அண்டு சன்ஸ், எஜு-ரோடு. ● ஈரோடு: வேலா புக் கம்பெனி, 5 அண்ணாஜி தெரு. ராஜ் புக்சென்டர், 1021 பிரப் ரோடு.

நான்தான் உண்மையான காங்கிரஸ்

நரசிம்மராவ்

அர்ஜுன்சிங் கோஷ்டி

கே.கே. திவாரி



1995 ஜூன் 4
யுவ வைகாசி 21
மலர் : 53
இதழ் : 44

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



## விடாக் கண்டர் அர்ஜுனரும் கொடாக்கண்டர் நரசிம்மரும்!

'இதற்கு முன்பும் காங்கிரஸ் பல முறை உடைந்திருக்கிறது, பலவீனமடைந்திருக்கிறது, மறுபடி சக்தி பெற்று நாட்டை ஆள முன் வந்திருக்கிறது; எனவே, இப்போது உடைந்திருப்பது பற்றி அதிகக் கவலைப்பட வேண்டாம்' என்பது பலரது வாதம். ஆனால் காங்கிரஸ் முன்பெல்லாம் உடைந்ததற்கும் இப்போது உடைந்திருப்பதற்கும் இரு முக்கிய வித்தியாசங்கள் உண்டு.

முன்பு கொள்கை அளவில் மாறுபட்டு தலைவர்கள் பிரிந்தார்கள். இப்போது பிரமாதமான கொள்கை மாறுபாடு ஏதும் இல்லை. அர்ஜுன்சிங் கூறும் சங்கதிகள் ஏதும் பிரதமர் கூறி வருவதற்கு மாறுபட்டவையல்ல. அர்ஜுனர் எதிர்பார்க்கும் அளவில் வேகமாகப் பிரதமர் செயல்படவில்லை என்பது மட்டுமே வித்தியாசம். ஆக, இதிலே கொள்கை மாறுபாட்டை விடவும் பதவி மோகம்தான் முன்நிற்கிறது என்பது எல்லோருக்கும் புரியும். அர்ஜுனருக்கு பிரதமர் நாற்காலி மீது கண். நரசிம்மரோ இறங்க மறுக்கிறார்.

இரண்டாவது முக்கிய வித்தியாசம், முன்பெல்லாம் காங்கிரஸ் உடைந்த போதிலும் அதற்குப் புனர்வாழ்வு தரவும் பலப்படுத்தவும் நேரு குடும்பத்தைச் சேர்ந்த யாரேனும் ஒருவர் இருந்தார். நேரு பிரபை டானிக்காக அமைந்து




காங்கிரஸ் மறுபடி பலம் பெற உதவியது. இக்காரணத்தால்தான் தற்போதும் சோனியாவை வளைத்துப் போட இரு தரப்பிலும் முயற்சி நடக்கிறது. ஆனால் என்னதான் சொன்னாலும் சோனியா, ஒரு ராஜீவ் ஆக மாட்டார்; ஒரு இந்திரா ஆகவும் முடியாது. மக்கள் ஒப்ப மாட்டார்கள்.

காங்கிரஸ் உடையும் அளவுக்கு அர்ஜுன்சிங் தமது ஈகோவை வளர்த்துக் கொண்டிருக்க வேண்டாம் என்பது ஒருபுறமிருக்க, ராவும், "இந்தாப்பா, 'தேர்தல் தோல்வி; தேர்தல் தோல்வி'ன்னு புலம்பாதே; பொறுப்பை உன்னிடமே விடறேன்; ஜெயித்துக்காட்டு" என்று கூறியிருக்கலாம். காங்கிரஸ் தலைவர் பதவி இல்லை என்றாலும் "செயலாற்றும் தலைவர்" (Working President) என்ற பதவியை உருவாக்கித் தந்திருக்கலாம். அப்படி செய்திருந்தால் அர்ஜுன் சிங்குக்கு ஒரு சவாலாகிப் போயிருக்கும். காங்கிரஸின் மதிப்பும் உயர்ந்திருக்கும்.

இப்போதோ, இரண்டுங்கெட்டானாகிப் போய், பிளவுபட்டுப் பிரிந்து வந்துள்ள காங்கிரஸுக்குள்ளேயே நாலு நாளைக்குள் மறுபடி ஈகோ பிரச்னை தலைகாட்ட, கே.கே.திவாரி காரியக் கமிட்டியிலிருந்து ராஜினாமா செய்வதாக அறிவித்துள்ளார்!

மத்திய காங்கிரஸ் ஆட்சிக்கோ அல்லது ராவின் பிரதமர் பதவிக்கோ உடனடி ஆபத்து ஏதும் இல்லை என்றாலும் நாடாளுமன்ற காங்கிரஸ் உறுப்பினர்களை இழுக்கப் பார்க்கும் முயற்சி இனி தொடங்கும். கட்சித் தாவல் தடை சட்டத்தின்




கீழ் எம்.பி. பதவி பறிபோகாமலிருக்க வேண்டும் எனில், கணிசமான அளவில் காங்கிரஸ் எம்.பி.க்கள் அர்ஜுனருக்கு ஆதரவு தர வேண்டும்.

இதற்கு வாய்ப்பில்லாதபடிக்கு எம்.பி.க்கள் நன்கு "கவனித்துக்' கொள்ளப் படுவார்கள் என்று நம்பலாம். அதோடு சின்னச் சின்னக் குழுக்களாக இயங்கும் குட்டிக் கட்சிகளுக்கு இனி "கிராக்கி" அதிகரிக்கும். "சக்கைப்போடு போடு ராசா"தான்!

'ஒரு முழு பதவிக்காலம் ஆட்சியில் அமர்ந்து இருந்து விடவேண்டும்' என்ற ராவின் ஆசை ஒரு வேளை நிறைவேற முடியாமல் போனாலும் நாடாளுமன்றத் தைக் கலைத்து, தேர்தலை நடத்தத்தான் ஜனாதிபதிக்கு சிபாரிசு செய்வாரே தவிர, தம்மைக் கவிழ்த்துவிட்டு இன்னொருவர் பதவிக்கு வருவதை அனு மதிக்கவே மாட்டார்.

இதற்கு வாய்ப்பில்லாத போது, தேர்தலை சந்தித்துத்தான் அர்ஜுன் சிங் பதவிக்கு வரவேண்டியிருக்கும். அந்த அளவுக்கு மக்களிடம் அவருக்கு செல்வாக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

காங்கிரஸ் உடைந்ததில் பி.ஜே.பி.க்குத்தான் வாய்ப்பு அதிகம். பிரத்யட்ச நிலையை உணர்ந்து, தீவிர ஹிந்துத்துவக் கொள்கையைக் கைவிட்டால் அவர்களுக்கு நல்லது; நாட்டுக்கும் நல்லதுதான்!

# Kalki Shopping Page


**WE WELCOME YOU TO THE WORLD OF KARISHMA CHURIDARS AND COTTON SAREES**

**OUR PRODUCTS**

1) Karishma Churidars
2) Karishma Sarees
3) Andhra Pochham Palli Cotton Sarees
4) Belgaum Polyster (Saradha) Sarees
5) Seiko Sarees
6) Banaras cotton sarees
7) Beekay Sarees (New Product)

## AALURI SAREES

*The Shop exclusively for Ladies*

(DEALER OF KARISHMA CHURIDARS & SAREES)

WHOLESALE & RETAIL

4/24, R.K. MUTT ROAD, LUZ BAZAAR,
MYLAPORE, MADRAS - 600 004.
NEXT TO SRINIVAS SILK
PHONE : 4935791

WE WELCOME CITIBANK CARDS

KOMALA ADS



## GEMINI

BRAND



PURE GHEE

S. ARUNACHALAM & CO.
BUTTER & GHEE MERCHANTS
TIRUPUR - 641 604
Phone : 21331, 700619 Tel. : GHEE

15 KG & 5 KG. டின் மற்றும் கேன்களிலும், 1 KG, 500 gm, 200 gm, 100 gm, அழகிய பொட்டலங்களில் கிடைக்கும்.

BUMA






## Best Benefit and Guarantee Fund Trust Regd., (Estd., 1979)

3rd Floor, Santhi Complex,
26, Ranganathan Street, T. Nagar,
Madras - 600 017.
Phone:Off: 4348560 Res: 4347025

பென்ஷனர் பாதுகாப்புத் திட்டம் (TM) — 24% வட்டி + 9% இன்சென்டிவ்

பொது ஜன பாதுகாப்புத் திட்டம் (TM) — 24% வட்டி + 8% இன்சென்டிவ்

தங்கப் பத்திரத் திட்டம் (கோல்ட் பாண்ட் ஸ்கீம்) (TM)

ரூ.6,000 டெபாசிட் செய்து 3 வருஷம் கழித்து 3 சவரன் தங்கம் பெறலாம்

- மாத வட்டிக்கும், டெபாசிட் ரீபண்டிற்கும் டெபாசிட் செய்யும் தேதியன்றே செக்.
- டெபாசிட்டுகள் கம்பெனியின் சொத்தின் மீது தொடர் உரிமையால் பாதுகாக்கப்படுகின்றன.

Prof. V. VIVEKANAND
Formerly I.A.S., Managing Director

Dr. PARAMESWARI
M.B.B.S., Chairman

# Kalki Shopping Page


ஸ்ரீராமபிரானுக்குப் பாலம் அமைக்க சின்னஞ்சிறு அணிலும் பணி செய்தது.
உங்கள் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பாலம் அமைக்க நாங்களும் உதவ முடியும்

## நடராஜ் ஃபைனான்ஸ்

புத்தாண்டு சலுகை (இன்னும் சில நாட்களே)

மினிமம் டெபாசிட் ரூ. 10,000 ☐ காலம் 12 மாதங்கள்

**சிறப்புப் பரிசு : 1 கிராம் தங்கக் காசு**

வழக்கமான பரிசு 4% + 1% பென்ஷனர்ஸ்

6 மாதம் 12 மாதம் 24 மாதம் 36 மாதம்

☐ உடனுக்குடன் ரினிவல் வசதி ☐ ரினிவலுக்கும் பரிசு ☐ அசலுக்கும் வட்டிக்கும் 'செக்'

☐ 36 மாதங்களுக்கு ரூ. 12,000 டெபாஸிட் செய்து 3 சவரன் தங்கம் பெறும் லாபகர திட்டம்

☐ 3 வருடத்தில் இரட்டிப்பாகும் டெபாசிட் திட்டம் ☐ பண்ணை வீடு திட்டம்

☐ சீட்டு குரூப்பில் கடன் வசதி

பண்ணை வீடு தயாராகிறது. மாதம் ரூ. 500 மற்றும் ரூ. 1000. காஞ்சிபுரத்துக்கு அருகே.
பெங்களூர் நெடுஞ்சாலையை ஒட்டி விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :
(சர்வே நீ. 444/1, 453/3, 461/2)




**Phone : 4342098, 4840150**

NATARAJ FINANCE & INVESTMENTS
NATARAJ CHITS (TAMILNADU) PVT LTD.,
NATARAJ ESTATES–FARM HOUSE PROMOTERS
"Shanthi Complex", 3rd Floor, 26-Ranganathan St.,
T. Nagar, Madras-600 017. B.O. KANCHEEPURAM-1.

★ சீட்டுநிதி ★ ஆயில் மில்ஸ் ★ எக்ஸ்போர்ட்ஸ் ★ பண்ணைவீடு ★ பதிப்பகம் ★

adchoice

Krishna  Everywhere

## ஸ்ரீ கிருஷ்ணா கட்பீஸ் கலெக்ஷன் (பி) லிமிடெட்

நாங்கள் தயாரிக்கும் சூட்டிங், சர்டிங், கட்பீஸ், சேலைகள், மாட்சிங் பிளவுஸ், பள்ளி-அலுவலக யூனிஃபாம்கள் மொத்த மாகவும், சில்லரையாகவும், நியாயமான விலைக்குக் கிடைக்கும்.

**Also Available Banians & Briefs**

59, குடோன் தெரு,
பூக்கடை போலீஸ் நிலையம்
எதிரில்,
சென்னை - 600 001.

எங்கள் கம்பெனிக்கு
வேறு கிளைகள் கிடையாது.



ADYAR
## STUDENTS XEROX

*Quality that is close to perfection*

XEROX
LASER PRINTING
WORD PROCESSING
DTP
ELECTRONIC &
MANUAL TYPING
BINDING &
LAMINATION

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில்....

◆ 'தண்ணீர் ராசியும் கண்ணீர் சோகமும்' தலையங்கம் படித்தேன். நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி ஒல்லும் வாய் ஊன்றும் நிலை - என திருவள்ளுவர் கூறியதற்கேற்பத் தம் தோழிக்கு முடியும் போதெல்லாம் உதவி செய்து தாங்கும் குணம் படைத்த ஜெயலலிதாவிற்குத் தமிழ் நாட்டைப் பற்றியோ, தமிழ்நாட்டு மக்களைப் பற்றியோ கவலையில்லை. ஜெயலலிதாவிற்குத் தண்ணீர் ராசியும் உண்டு; நாட்டில் அபலைப் பெண்களின் சோகமான கண்ணீர்க் கதைகளும் உண்டு. இதனைத் தாய்க் குலம் புரிந்து கொள்வார்கள் என்ற நம்பிக்கையும் உண்டு.

திருச்சுழி, சுந்தர் அழுகேசன்.

**(மேலுள்ள கடிதம் ரூ. 20 பரிசு பெறுகிறது)**

◆ 'அடுத்த நூற்றாண்டில் அட்மிஷன்' கார்ட்டூன் சித்திரங்களைப் பார்த்ததும் இதே மாதிரி நடந்தாலும் நடக்குமோ என்ற பயமும், ஐயமும் என் மனத்தில் எழுந்தன.

கோயம்புத்தூர், கோ. கல்யாணசுந்தரம்.

◆ எனக்கு ரொம்ப நாளாகவே 'பைபாஸ் ஆபரேஷன்'ங்கிற வார்த்தைக்குப் பொருள் விளங்கிக் கொள்ள முடியாமல் இருந்து வந்தது. அதற்குப் பதில் கூறுவது போல் 'இதயத்தைத் துளைத்து உயிர் தருகிறார்கள்' கட்டுரை அமைந்து, கூடவே போனஸ் விஷயங்களையும் தெரிந்து கொள்ள உதவியது.

திருப்பூர் - 1, எஸ். ரமேஷ் குமார்.

◆ இ. காங்கிரஸ் கட்சியின் இன்றைய நிலைமையை உள்ளங்கை நெல்லிக்கனியென எடுத்துக்காட்டியது, இந்த வார கார்ட்டூன்.

திண்டுக்கல், ஜனனி பார்கவி.

◆ ஜெ. ஜெ. டி.வியில் 'சொல் இல்லை செல்' என்ற நிகழ்ச்சியில் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு, 'சிவகாமியின் சபதம்' எழுதியவர் சாண்டில்யன் என்று கேள்வி கேட்ட அறிவிப்பாளரே கூறினார். பல லட்சக்கணக்கான வாசகர்களால் படித்துச் சுவைக்கப் பட்ட 'சிவகாமியின் சபதம்' எழுதியவர் அமரர் கல்கி என்பது ஜெ.ஜெ. டி.வி. நிகழ்ச்சி தயாரிப்பாளருக்குத் தெரியவில்லை என்பது ஆச்சரியமாக உள்ளது.

கோவை, ஜி. ராஜேஷ்.

◆ சித்தார்த் எழுதிய 'எம்எல்ஏக்களின் உள்ளங்களை ஏ.சி. பண்ண யோசனைகள்' படித்துச் சிரித்துச் சிரித்து வயிறு வலித்துவிட்டது. போகிற போக்கில் இனி இவ்வாறெல்லாம் அலவன்ஸ் கொடுத்தாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை.

சிதம்பரம் -1, ஸ்ரீவித்யா காளிதாஸ்.

◆ 'நிறம் மாறிய பூக்கள்' சிறுகதை புதுமையாகவும் யதார்த்தமான முடிவுடனும் கவர்ந்தது. நடையும் சிறப்பாக இருந்தது. பாலாமணிகள் நாட்டில் நிறைய இருக்கிறார்கள். அவருடைய மாற்றமும் வரவேற்கத் தக்கதே. வருந்தத் தேவையில்லை.

சென்னை - 92, வி. வித்யா.

◆ 'நிறம் மாறிய பூக்கள்' கதை படித்தேன். வாலிப வயதில் ஆண்களையும், திருமண வாழ்வையும் வெறுக்கும் பெண்கள் பிறகு காலத்தின் கட்டாயத்திற்காகத் திருமணம் செய்து கொள்வது போன்ற பல கதைகள் நிறைய பத்திரிகைகளில் படித்துவிட்டேன். 'தலைப்பு மாறும் கதைகள்' என்று வேண்டுமானால் கூறலாம்.

சென்னை - 53, வி. பி. ஸ்ரீநிவாஸன்.

◆ பணம்தான் பெரிது என்று அலைபவர்களுக்கு நல்ல சவுக்கடியாக அமைந்தது யோகியின் "இரைற்றுக் கூச்சல்" சிறுகதை.

திருச்சி - 2, அக்கரைப்பட்டி கனகராஜ்.

◆ டைரக்டர் கே.எஸ். ரவிக்குமாரின் பேட்டி யதார்த்தமாக இருந்தது. ஒரு படம் வெற்றியடைந்து விட்டாலே தலைகால் புரியாமல் ஆடும் டைரக்டர்கள் மத்தியில், 'புரியாத புதிர்,' 'சேரன் பாண்டியன்', 'புருஷ லட்சணம்', 'நாட்டாமை' போன்ற வெற்றிப் படங்களைக் கொடுத்தும் பந்தா இல்லாமல் பேட்டி அளித்திருந்த விதம் பாராட்டச் சொல்லுகிறது.

தேவராயநேரி, மு. கருணாநிதி.

◆ 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' பகுதியில், 'பிரதமர் சிரிக்காவிட்டாலும்' என்ற தலைப்பில் வந்துள்ள தகவல் தவறானது. திருபுவனத்திலுள்ள சரபர், தசாவதாரங்களுள் ஒன்றான நரசிம்மாவதாரம் அல்ல. அது சிவனுடைய அவதாரம். இதைப் பற்றி நஜன் என்பவர் புத்தகமே எழுதியுள்ளார்.

திருச்சி - 8, ரமா ரகுநாத்.

◆ "இந்திரா" பட விமர்சனம் படித்தேன். படத்தைப் பற்றி உள்ளது உள்ளபடி தரம் பிரித்து விமர்சனம் செய்த உம்மைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

லால்குடி, மு. கிருஷ்ணா.

◆ பிரபல டைரக்டரின் மனைவி, சிறந்த நடிகை டைரக்ட் செய்த படம் என்கிற சிந்தனையில் படம் பார்க்க நேர்ந்து விமர்சனம் வந்ததால், 'இந்திரா' விமர்சனம் ஸாரி... சற்று குழப்பம்தான்!

திருச்சி - 20, ச. நாகராஜன்.




### ரஜினிக்கு எத்தனை மனைவி?

எங்கள் பக்கத்து வீட்டுப் பையன் (வயது 8) பயங்கர ரஜினி ரசிகன். ஒரு நாள் பெற்றோருடன் ஏதோ ரஜினி படத்திற்குப் போய் வந்தவன், ''ரஜினி மாமா ஒவ்வொரு படத்திலும் ஒவ்வொரு பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிறாரே, மொத்தம் அவருக்கு எத்தனை பெண்டாட்டி இருப்பாங்க?'' என்றானே பார்க்கலாம்! சிரிப்பில் எங்கள் தெருவே அதிர்ந்தது!

- என். சங்கரசிவன், வலங்கைமான்.

### சிலை வருமா?

பெங்களூரைச் சேர்ந்த வி.எஸ். ஹரி என்கிற தொழிலதிபர், மறைந்த காஞ்சிப் பெரியவரின் திரு உருவச்சிலை ஒன்று செய்து, திருவையாறு அருகே உள்ள, ஈச்சங்குடியில் - (தற்போது வேதபாராயண வகுப்பு நடந்துவரும்) பெரியவரின் தாயார் வசித்த வீட்டில் வைக்க வேண்டுமென்று விரும்பினார். ஒன்றரை லட்ச ரூபாய் செலவில் ஒரு கல்கத்தா சிற்பியால் உருவான அம்மெழுகுச் சிலை மிக தத்ரூபமாக அமைந்துவிட்டது! ஈச்சங்குடிக்கு வரும் வழியில் அச்சிலையைக் கண்டு பிரமித்த காஞ்சி சங்கர மடத்தினர், சிலையைக் காஞ்சியிலேயே வைத்துக் கொண்டு விட்டனர்! பெரியவரின் திரு உருவச்சிலையைத் தரிசிக்கும் வாய்ப்புக்காக இன்னும் ஏக்கத்துடன் காத்திருக்கின்றனர் ஈச்சங்குடி மக்கள்!

- ஜி. குணசேகரன், ஈச்சங்குடி.

### இலவச சவாரி

மயிலாடுதுறையிலிருந்து கும்பகோணத்துக்கு ஒரு பேருந்தில் இலவசமாகப் பயணம் செய்யலாம்! கும்பகோணத்திலிருந்து பட்டீஸ்வரம் துர்க்கை கோவிலுக்கும் இலவச பஸ் சவாரி உண்டு! அரசுப் போக்குவரத்துக் கழகங்கள் எதுவும் இச்சேவையைச் செய்வதில்லை; குடந்தை துர்கா டிரான்ஸ்போர்ட்தான்! தினமும் இரவு கடைசி ட்ரிப்பில் இச்சலுகை தருகிறார்கள்.

- இடவை எழில், திருவிடைமருதூர்.

### மணக்க மணக்க வியாபாரம்

குடந்தை நகர வீதிகளில் ஒரு பட்டதாரி இளைஞர், நூதன முறையில் லாட்டரி டிக்கெட் விற்கிறார். பளபளக்கும் பித்தளை தாம்பாளத்தில் வெற்றிலை, சீவல், சந்தனம், குங்குமம் ஆகியவற்றை வைத்து, சீட்டு வாங்க வருபவர்களுக்கு முதலில் வெற்றிலை, சந்தனமெல்லாம் கொடுத்து பின்பே வியாபாரம்! செலவு போக தினம் 25 ரூபாய் லாபம் கிடைக்கிறது என்கிறார் இவர்!

- எஸ். கே. மூர்த்தி, கும்பகோணம்.

### டீன் ஏஜ் டிக்ஷனரி

- எஸ்.டி.டி. - வெளியூர்க்காரன்
- ஐ.எஸ்.டி. - வெளி நாட்டுக்காரன்
- எஸ்.டி.எஸ். - பஸ் படிக்கட்டில் தொங்கும் வாலிபன்
- கொரியர் சர்வீஸ் - தூதுவன்
- அரவிந்த் சுவாமி - மிஸ்டர் ஸ்மார்ட்
- சுப்பிரமணிய சுவாமி - வம்பு செய்பவன்
- குஷ்பு - கைவிடப்பட்ட காதலி
- ராய் - பேரழகி
- ராவ் - காரியக்காரன்
- ஸ்பீக்கர் - வெட்கப்படாதவன்
- சசி - நிறைய நகை அணியும் பெண்
- பஜூன் - காதல்
- பஞ்சு மிட்டாய்க்காரன் - பெண்ணின் அப்பா
- கேபிள் டி.வி. - அதிக காதலர்கள் உடைய பெண்
- பெப்ஸி உங்கள் சாய்ஸ் - பெண் பார்க்கும் தினம்

- ஜி. உமா, ஈச்சங்குடி.

### பாடம் படிக்க....

தஞ்சையைச் சுற்றியுள்ள கிராமங்களில், பித்தளைப் பாத்திரங்களை அடகு வைப்பவர்கள், 'பிள்ளையைப் பாடம் படிக்கக் கொண்டு வந்திருக்கிறேன்' என்றுதான் குறிப்பிடுவார்கள்!

- ப்ரகத்தீஷ், தஞ்சை - 2.

### அண்ணாமலை

நான், அஞ்சல் வழியாக அண்ணா

## ரஜினிக்கு எத்தனை மனைவி?

மலை பல்கலைக் கழகத்தில் படிப்பது பற்றி வீட்டில் ஒருதரம் பேச்சு வந்தபோது, என் சித்தப்பா மகன் (வயது 14) 'அண்ணாமலை பல்கலைக் கழகத்துக்கு, 'அண்ணாமலை' படம் வந்தபின்தான் அப்பெயர் வைக்கப் பட்டதா?' என்று கேட்டதும் அதிர்ந்து விட் டோம். திரைப்படங்களின் ஆதிக்கத்தின் முன் கல்வியெல்லாம் இரண்டாம் பட்ச மாகி வருவது வேதனையாக இருக்கிறது!

- வி. தமிழ் தங்கநிலா, தஞ்சாவூர்.




இப்படியும் ஒரு டாக்டர்!

**த**ஞ்சை கீழவாசல் மீன் மார்க்கெட் சாலையில் டாக்டர் எம். பன்னீர்செல்வம் கிளினிக்கில் எப்போதும் கூட்டம் அலை மோதும். காரணம், கைராசி என்பது மட்டு மல்ல, ஏழைகள் காசில்லா விட்டாலும் இவரிடம் வந்து வைத்தியம் பார்த்துப் போகலாம். கடன் சொல்லிவிட்டும் பார்த் துக் கொள்ளலாம்! காசு இவருக்கு ஒரு பொருட்டே அல்ல! (இத்தனைக்கும் எலக்ட் ரிக் பில் கட்டக் கூட சிரமப்படுபவர் இவர்!) நோயாளிக்கே தெரியாமல் கிட்னி திருடும் டாக்டர்கள் மத்தியில் இப்படியும் ஒருவர்!

- க. வ. குமாரசாமி, தஞ்சை - 1.

ஜோக்ஸ்

**"இவர் எம்.பி.பி.எஸ். படிச்சிட்டு அரசிய லுக்கு வந்திருப்பார் போலிருக்கு."**

**"எப்படிச் சொல்றீங்க?"**

**" 'AB' குரூப் ரத்தம் போல் மற்றவர்களிட மிருந்து பெறுவதைக் குறிக்கோளாகக் கொள்ளாமல் 'O' குரூப் போல் அனைவ ருக்கும் வழங்குவதை லட்சியமாகக் கொள் வோம்'னு பேசறாரே!"**

**- வெ. முருகானந்தம், தஞ்சை - 1.**

*"ஐயோ சாமியாரே! அந்த ஆளு என் னைக் கற்பழிக்க வரானே!"*

*"ராஸ்கல்! நான் ஒருத்தன் இருக்கிற தையே மறந்துட்டானா?"*

*- ஜி. சீனிவாசன், புதுச்சத்திரம்.*

"டேய், என் சைக்கிள் எந்த சாமி யாரைக் கண்டாலும் ஸ்பீடா ஓடுது!"

"அது லேடீஸ் சைக்கிள் ஆச்சே!"

- எஸ். மகேந்திரன், குலமங்கலம்.

கவிதைகள்

- **அண்ணனுக்குத் திருமணம்**
  **அனைவருக்கும் சந்தோஷம்,**
  **அடுப்படிக்கு ஆள் வந்தாச்சு.**

- **பூத்த நாள் தொடங்கி**
  **விலக்கு நின்ற நாள்வரை**
  **செய்த சொஜ்ஜி பஜ்ஜிக்காய்**
  **கின்னவில்....**

- பொறியில் எலி
  தூண்டிலில் மீன்
  தாலியில் அவன்.

  - எஸ். மோகன், குடந்தை.

- **வேகத் தடைகளுக்கெல்லாம்**
  **சாப விமோசனம்.**
  **வீதி உலா வருகிறார்**
  **தொகுதி முக்கிய பிரமுகர்.**

  **- எஸ். விஜயகுமார், தஞ்சை - 6.**

- *சிலேட் இல்லையென்ற*
  *சிறுமியை*
  *எழுந்து நிற்கச் சொன்னார்*
  *ஆசிரியர்.*
  கரும்பலகை இல்லாத பள்ளி.

  - எம். ரெங்கசாமி, தஞ்சை - 2.

- *காதலித்து வந்தவரையே*
  *கல்யாணம் முடித்தேன்.*
  *கேட்ட வரதட்சணை தந்து.*

  *- அணைக்குடி, சீதா.*

இந்த வாரத்துடன் 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' பகுதி நிறைவுறுகிறது. சிறந்த படைப் புக்கான சிறப்புப் பரிசு ரூ. 100 பெறுபவர் : ஹரணி, தஞ்சை - 2, - 'லவ்' கவிதைக்காக (கல்கி 21.5.95).

## வெற்றி பெறும் வகைகள், நீடித்துழைக்கும் நிறங்கள்

**பாம்பேடையிங்
பள்ளிச்
சீருடைத்துணிகள்.**

வெற்றி வாகை சூடி என்றும் முன்னணியில் உள்ள இத்துணிகள் கீழ் கண்ட சிறப்பம்சங்களைக் கொண்டுள்ளன:

- துவைக்க மற்றும் உடுக்க எளிதானது
- நிறங்கள் மங்காது
- ஒவ்வொரு சலவைக்குப் பின்னும் புத்தம் புதியது போல் தோன்றும்.
- சுருக்கங்கள் ஏற்படாது.
- உங்களுக்குத் தேவையான நிறங்களில் கிடைக்கிறது.

பாம்பே டையிங் பள்ளிச் சீருடை அணிவரிசையில் சூட்டிங்ஸ் மற்றும் தூய பருத்தி மற்றும் பாலியெஸ்டர் ப்ளெண்டுடன் கூடிய ஷர்ட்டிங்ஸ், பள்ளிப் பைகள் மற்றும் லாக்ஸ்களும் உட்பட்டதாகும்.

SEASONS/BD/687/TAM

# பள்ளிச் சீருடைத்துணிகள்

**பாம்பே டையிங்**



நகர வாழ்க்கை என்பது, இலட்சக்கணக்கான மக்கள் கூடி தனிமையில் வாழ்வது. - தோரோ

தகவல் : கோபி. நாகராஜன்



"சார்... போஸ்ட்..." சரஸ்வதி விரைந்து சென்றாள் வாசலுக்கு.

"ரெஜிஸ்தர் போஸ்ட்மா... கையெழுத்துப் போடுங்க."

கையெழுத்திட்டாள்.

"என்னம்மா... என்ன கவர்..." மகளின் கேள்விக்குப் பதில் சொல்லாமல் கவரை மும்முரமாய் பிரித்துக் கொண்டிருந்தாள்.

"ஏய் அனு... சீக்கிரம் வா... நீ நேஷனல் லெவல் ட்ராயிங் காம்படிஷன்ல பர்ஸ்ட் ப்ரைஸ் வாங்கிருக்கடி..."

"என்ன... நேஷனல்... என்ன ப்ரைஸ்..." சாரதியும் வந்து விட்டார்.

"உங்க பொண்ணு... எனக்குப் பேசவே வரலை. சென்னைக்குப் போகணும்... இங்க பாருங்க... நீங்க டை அடிச்சது வீண் போகலை. இளமையான அப்பாவோட, வயசான அம்மாவோட அனு மேடைல ப்ரைஸ் வாங்கப் போறா..." என்ற மனைவி சரஸ்வதியின் கிண்டலை ரசிக்க முடியவில்லை சாரதியால்.

"இங்க பாரு... சரசு... இளமையா இருக்கணும்னு நினைக்கறது தப்பா? என் விஷயத்துல தலையிடாதே, ப்ளீஸ்..." சரஸ்வதியின் கையிலிருந்து கவரை பறித்துக் கொண்டார்.

"அப்பா... மீசை அங்கங்கே நரையா... தலை மட்டும் கறுப்பா... ஜோக்பா.. உங்களோட...." என்ற மகளை முறைத்தார்.

"ஸ்டாப் திஸ் நான்சென்ஸ்... அம்மாவுக்கும், பொண்ணுக்கும் வேற வேலையில்லை... சரி சரி... நான் போய் டிக்கெட் புக் பண்ணிட்டு வரேன் அனு..." கண்ணாடியை மீண்டும் ஒரு தடவை பார்த்து விட்டுக் கிளம்பத் தயாரானார் சாரதி.

"என்ன ஸார்... என்னமோ போஸ்ட் வந்தது போல இருக்கு. பர்ஸ்ட் ப்ரைஸ்.. அப்படின்னு காதுல விழுந்தது..." என்றவாறு உள்ளே நுழைந்தான் என்ஜினீயரிங் படிக்கும் ரமேஷ், அடுத்த ப்ளாட்டில் வசிப்பவன்.

"அதானே... காதைக் கூர்மையா வெச்சுக்கிட்டு இருப்பீங்களே..." என்றார் தமாஷாய் சாரதி.

"வா... ரமேஷ்... நான் விவரமா... சொல்றேன். அப்பா நீங்க டிக்கெட் புக் பண்ணிட்டு வாங்கப்பா."

அடுத்த ஒரு மணி நேரத்தில் சாரதிக்கு ஏகப்பட்ட வாழ்த்துக்கள்.

"ஸார்... உங்க பெண்ணை உங்களை மாதிரியே கொண்டு வந்திட்டீங்க ஸார்."



"சே... சே... என்ன நீங்க... அவ கஷ்டப்பட்டா... அவ வந்தா... இதுல என்னோட பார்ட் என்ன இருக்கு..." என்றார் சாரதி அடக்கமாய்.

"ஓவியத் தலைப்பு என்னம்மா அனு... அதையே கேட்க மறந்துட்டேன்மா..."

"தேடல்" என்றாள் அனு.

"அது என்ன தேடல்?"

"சொன்னா கோபம் வரும்பா... உங்களுக்கு..."

"எனக்கென்ன கோபம்... வர துக்கு இருக்கு..."

"காலைல அம்மாட்ட திட்டு வாங்கினீங்களேப்பா... அந்த டாபிக்..." என்றதும் 'சட்' என பொறிதட்டியது.

"ஓ... இளமையைத் தேடறது பத்தியா?"

"ஆமாம்பா..! ஒருவிதத்துல... இதுக்கு இன்ஸ்பிரேஷனே நீங்க தாம்ப்பா..." என்ற மகளை ஆச்சர்யத்துடன் பார்த்தார்.

# தேடல்

"ஆமாம்பா. நீங்கதாம்பா... இளமை தொலைஞ்சுட்டுதுன்னு நினைச்சிட்டு... அதை டைலயும், மத்ததுலயும் தேடறீங்க... தேவையே இல்லைப்பா."

"ஆமாங்க... கொஞ்ச நாழி முன்ன... அனுவோட ப்ரெண்ட்ஸ் என்ன சொன்னாங்க?" என்றாள் சரஸ்வதி.

"என்ன சொன்னாங்க?"

"அப்படியே உங்களோட டேலண்ட்தான் அனுவுக்குன்னு..."

"அதனால?"

"உங்களோட ஓவியம் வரையும் திறமை, நுணுக்கம், அறிவு... அதோட இல்லாம... உங்களை மாதிரியே வித்தியாசமான சிந்தனைகள்... பாருங்க... 'தேடல்' என்ன அருமையான தலைப்பு... நீங்க எங்கேயும் போகல்லைங்க... நீங்க எதை இழந்தீங்க தேடறதுக்கு?" நிறுத்தினாள் சரஸ்வதி.

அனுவைப் பார்த்தார் சாரதி.

'நான் எதையும் இழக்கலை. தேடறதுக்கு.. எல்லாம் என் மகள் ரூபத்துல கிடைச்சிருக்கு....'

"என்னங்க... சிந்தனை?"

"ஒண்ணுமில்லை... அனு இங்க வாடா..."

மகளை அழைத்து உச்சிமோந்தார் சாரதி.

**திருமாமகள்**



"அரசர் ஏன் கோபமாக இருக்கிறார்?"

"தேர் சக்கரத்திற்குக் காற்றடித்த வகையில் செலவு ரூபாய் இரண்டாயிரம் என்று அமைச்சர் கணக்கெழுதி வைத்திருக்கிறாராம்!"

- எஸ்.எஸ். பூங்கதிர்

# ஞானபூமி

**9**

தென்னிந்தியாவின் குடி பெயர்ப்புகளுக்கு அநேகமாய் முஸ்லீம் மன்னர்களின் படையெடுப்புகள்தான் காரணமாயிருந்திருக்கின்றன. காலம் காலமாய் வாழ்ந்து வந்த ஒரு இடத்திலிருந்து ரத்தமும் சதையுமாய் பிய்த்துக் கொண்டு, பெருங்கூட்டமாய் இடம் பெயர்ந்து பத்திரமான இடம் நோக்கி பயந்து பயந்து நகர்ந்திருக்கிறார்கள்.

உயிருக்கு பயந்து, மானத்துக்கு அஞ்சி குடி பெயர்தல் போல ஒரு வேதனை எதுவுமே இல்லை. மைசூருக்கு அருகே இருந்த சில கிராமங்கள், முஸ்லீம் அரசர்களின் கொடுமை தாங்காமல் தெற்கு நோக்கி நடந்து, அடர்ந்த காடுகள் உள்ள மலையில் போய் ஒளிந்து கொண்டன.



அந்த மலையின் செழிப்பைக் கண்டு அங்கேயே தங்கி விட்டது. அது குடி பெயர்கிறபோது தமிழ் பேசுகிற இடமாக இருந்த மலை பிறகு மலையாளிகளின் சொத்தாக மாறியது. யார் என்ன பேசினாலும் மைசூருக்கு அருகே இருந்து வந்த அந்த கன்னடியர்கள் கன்னடம் பேசினார்கள். எவரோடும் கலக்காமல் இருந்தார்கள். அவர்கள் வாழ்க்கையில் தமிழின் தாக்கம் அதிகமாக இருந்ததால் அவர்கள் கன்னடத்தில் தமிழ் மெருகு ஏறியது. ஆனாலும் வாழ்க்கை கன்னடிகா வாழ்க்கையாக இருந்தது.

அந்த மலைப் பகுதியில் ஏலப் பயிர் வர அரசாங்க அதிகாரிகள் வந்தார்கள். அரசாங்க அதிகாரிகள் வர சாலைகள் வந்தன. நல்ல சாலைகள் வர வியாபாரிகள் வந்தார்கள். வியாபாரிகள் வர வரிவசூலிப்புக்கும் இன்ன பிற விஷயங்களுக்கும் அரசாங்க அதிகாரிகள் வந்தார்கள்.

அரசாங்கம் வர கணக்குக் காட்டலும் மனு எழுதலும் வந்தது. தமிழர்கள் தமிழில் மனு எழுதினார்கள். கன்னடியர்கள் கன்னடத்தில் எழுதினார்கள். அதிகாரிகள் மலையாளத்தில் பேசினார்கள். மனுக்கள் மீது மலையாள மொழியில் தாக்கீது அனுப்பினார்கள். அந்த மலைகளில் ஏலக்காயும் காப்பியும் நன்கு விளைந்து, நிறைய வியாபாரம் ஆகிற போது, மொழி முக்கியத்துவம் பெறாமல் காசு மட்டுமே முக்கியத்துவம் பெற்றது. அறு நூறு வருடங்களுக்கு முன்பு வந்து குடியேறியதால் கன்னடியர்களுக்கு அங்கு பாத்தியதை இருந்தது. சில வருடங்களுக்கு முன்பு வரை இந்தப் பகுதி தமிழ்நாட்டைச் சேர்ந்திருந்ததால் தமிழர்களுக்கும் பாத்தியதை இருந்தது. இப்போது கேரளத்தைச் சார்ந்த பகுதி என்பதால் மலையாள மொழி கொடிகட்டிப் பறக்கிறது.

ஆனால், மலையாளிகளுக்கு மொழி வெறி இல்லை. மலையாளி மலையாளியைத்தான் நேசித்தானேயொழிய மலையாளம் பேசுபவரை நேசிப்பதில்லை. தனக்கு இணக்கமாக நடக்கிறவர்கள் எல்லோரையும் மலையாளிக்குப் பிடிக்கும். தன் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து தனக்குப் பின்னே நாலுபேர் வர வேண்டும் என்கிற ஆசை மலையாளிக்கு உண்டு. வர மறுக்கிறவரை எதிரியாக நினைப்பதுண்டு. கன்னடியர்கள் யாரையும் தனக்குப் பின்னே வரச் சொல்ல மாட்டார்கள். அவர்களும் போக மாட்டார்கள். எப்போதுமே பிரகாசத்துக்கு வராத அடக்கமான ஒரு குழுவாய் அந்த மலைப் பகுதிகளில் அவர்கள்,



வாழ்ந்து வந்தார்கள். ஒரு கணக்கு எடுத்தால் கன்னடியர்களே எண்ணிக்கையில் அதிகமாக இருந்தனர். ஆனால் ஆளுமைச் சண்டை தமிழர்களுக்கும் மலையாளிகளுக்கும் மட்டுமே இருந்தது. தமிழர்கள் பிரச்னைகளுக்கேற்றவாறு தங்களை மாற்றிக் கொண்டே இருந்தனர். பிரச்னை முற்றி விட்டால் அதை மலையாளிகள் தீர்க்க வேண்டும் என்று எதிர்பார்த்தார்கள். அப்படி தீர்ப்பதில் லாபம் வரும் என்றால் அது மொத்தமும் தங்களையே சேர வேண்டும் என்று நினைத்தார்கள். ஆனால் வரி ஏய்ப்போ வழக்குப் போடுதலோ... தமிழர்களின் தந்திரம் மலையாளிகளைத் திணறடித்தது.

மூன்று விதமான மொழிக்காரர்களும் மூன்று விதமான கலாசார விஷயங்களும் அங்கு ஒரு விநோதமான கலவையாய்த் திகழ்ந்தது. இன ஒற்றுமை, மொழி ஒற்றுமை, கலாசார ஒற்றுமை இல்லாத ஓர் இடத்தில் 'உலகத் தொழிலாளர்களே ஒன்று படுங்கள்' என்று குரல் கொடுத்து செங்கொடி உயர்த்தி இன்குலாப் ஜிந்தாபாத் என்று கூவ வைத்துப் பன்னிரெண்டு ரூபாய் கூலியை பதினாறு ரூபாயாக உயர்த்த மிகப் பெரிய பாடுபட வேண்டியிருந்தது.

பிரச்னை என்று வந்தால் பின் வாங்கும் கன்னடத் தொழிலாளர்கள், நிலச்சுவான்தார்களாக இருக்கும் தமிழர்கள், பேச்சுக்குக் கட்டுப்படாத மலையாள அதிகாரிகள் என்கிற மூன்று கடுமையான விஷயங்களை ஒரு யூனியன் லீடர் தாங்க வேண்டியிருந்தது. இந்த மூவரோடுமே உட்கார்ந்து பேச மொழி அவசியமாக இருந்தது. இந்த மூன்று மொழியும் மிகச் சரளமாய் பேசத் தெரிந்து கொண்டதால் மூன்றிலுமே பற்றோ பாண்டித்தியமோ இல்லாது போயிற்று.

"மாஷே... தலைவரே... சாரே..." என்று மூன்று விதமாகவும் அழைக்கப்பட, எல்லா விளிப்புக்கும் தன்னைத்தான் அழைக்கிறார்களோ என்று திரும்ப வேண்டியிருந்தது.

பாலகுமாரன்

“யூனியனா செங்கொடியா... மலையாளத்தான் தன் புத்தி காமிச்சிட்டான். ஒரு நாளைக்கு பழம் பறிக்கிறமோ பறிக்கலையோ பன்னிரெண்டு ரூபா கூலி. சனிக்கிழமை அன்னிக்கு சம்பளம். ஞாயித்துக்கிழமை லீவு. இந்த மலைல உனக்கு எம்பது ரூபா சொச்சம் எவன்டா தருவான். இந்த எம்பது ரூபா இல்லைன்னா நீ கோமணத்துக்கு பதிலா இலைய கத்திக்கிட்டுத்தானே அலையணும். கிழங்கு பறிச்சு தின்னிட்டிருந்திங்க. உங்களுக்கு வேலையும் கொடுத்து கூலியும் கொடுத்தோம் பாரு... அதுக்கு, நன்னி செங்கொடியா? போராடுவோம் போராடுவோம்னு கத்தறியே... நாளை லேர்ந்து வேலைக்கு வராதே. போய் போராடு. நீ எத்தோட போராடுவேன்னு பார்த்துடறேன். நான் வேலைக்கு வச்சிருக்கறதாலதான எங்கிட்ட வந்து போராடுவோம் போராடுவோம்கற. இந்த நிமிஷத்திலேர்ந்து வேலைலேர்ந்து நின்னுடு. போராடு.”

தமிழ் நிலச்சுவான்தார்கள் போராடினார்கள். எதிர்த்து அட்டகாசம் செய்தார்கள். “சம்பளம் இல்ல போய்யா” என்று துரத்தினார்கள். போலீசுக்கு மனு எழுதி லஞ்சம் கொடுத்துக் கூட்டி வந்தார்கள். “ஒவ்வொரு அடிக்கும் ஒரு ரூபா. பரட்டைத் தலையா ஒரு யூனியன் லீடர் இருக்கானே. அவனை நீ அடிப்பியாம்... நான் பார்ப்பேனாம். ஒவ்வொரு அடிக்கும் ஒரு ரூபா.” பதினோரு வருடங்களுக்கு முன்பு ஆறு போலீஸ்காரர்கள் ஒரே ஆள் மீது பாய்ந்தார்கள். கை ஓயும் வரை அடித்தார்கள். தொலைவிலிருந்து தமிழர் கூட்டம் மலைமுகடு அதிரச் சிரித்தது.

ஆனால் அந்த போலீஸ்காரர்கள் யோக்கியமானவர்கள். எல்லா மலையாளிகளுக்கும் சங்க உணர்வு அதிகம் உண்டு. யூனியன் வேண்டும் என்கிற எண்ணம் போலீஸ்காரனுக்கும் இருந்தது. “உன்னை அடிக்கச் சொல்லியிருக்கிறார்கள். அடிக்கப் போகிறோம். லத்தியை மாற்றிவிடப் போகிறேன். லத்திக்கு பதிலாய் சோளத்தட்டை எடுத்துக் கொள்ளப் போகிறேன். உன்னைத் தனியே தள்ளிக் கொண்டு போய் சோளத் தட்டையால் அடிக்கப் போகிறேன். சோளத் தட்டையால் அடித்தாலும் வலிக்கும். இருப்பினும் பெரிய காயம் ஏற்படாது. காயம் ஏற்பட்டாலும் கட்டு போட்டுக் கொள். அது உனக்கும் நல்லது எனக்கும் நல்லது.” ஒரு அடிக்கு ஒரு ரூபாய் என்று லஞ்சம் வாங்கிக் கொண்டு யூனியனுக்கும் ஆதரவாய் பேசிவிட்டுப் போனார்கள்.

பிரச்னை இந்த கன்னடியர்களிடம் தான் இருக்கிறது.

“பசவப்பா.... சௌக்கியமா” என்றால் போதும். ‘ஏன் கேட்கிறாய்’ என்றுதான் பசவப்பா கேட்பான்.

ஒருங்கிணைந்து போராட வேண்டும் என்று சொன்னால் சாப்பாட்டுக்கு என்ன செய்வது என்று கேள்வி கேட்பான். கப்பங்கிழங்கு வேக வைத்துத் தின்னாவது உயிர் வாழ்வோம் என்றால் கப்பங்கிழங்குக்கு தொட்டுக் கொள்ள எது நன்றாக இருக்கும் என்று யோசிப்பான்.

கன்னடிகா சுகவாசி. ஒருவேளை சாப்பாடு சரியில்லாவிட்டாலும் புலம்பித் தீர்த்துவிடுகிறவன். நன்றாகச் சாப்பிட்டால்தான் நன்றாக வேலை செய்ய முடியும் என்று நினைக்கிறவன்.

வேலை நிறுத்தம் என்றால் சம்பளமில்லை. சம்பளமில்லையெனில் சாப்பாடு இல்லை. சாப்பாடு இல்லையென்றால் கன்னடிகா இல்லை. “என்ன குருவாயூர்... உன்னோ பொம்மை அழகாக இருக்கிறது.

---

## கடவுள் பங்கு



கோவில் உண்டியலில் சேர்ந்திருக்கும் பணத்தை பங்கிட்டுக் கொள்ளுவதில் சர்ச்சை கிளம்பியது.

ஒரு தர்மகர்த்தா சொன்னார்: “ஒரு வட்டம் போடுவோம். பணத்தை தூக்கி மேலே வீசுவோம். வட்டத்துக்குள் விழும் பணம் நமக்கு. வெளியில் விழுவது கடவுளுக்கு.”

இன்னொருவர் சொன்னார்: “ஏன் இந்த சிரமமெல்லாம்! நான் ஒரு கோடு இழுக்கிறேன். கோட்டின் இடது பக்கம் வரும் காசு, நம்மை சேர்ந்தது. வலது பக்கம் விழுவது கடவுளுக்கு.”

மூன்றாமவர் சொன்னார்: “இதெல்லாம் சரிப்பட்டு வராது. காசை தூக்கி மேலே எறிவோம். கீழே விழுவதெல்லாம் நம்மைச் சேர்ந்தது. கீழே விழாததெல்லாம் கடவுளைச் சேர்ந்தது!”

— யு.எஸ்.கே. மூர்த்தி

# பிதிர்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



இத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

**திருமண வைபவங்களுக்கு:**

சீர் முறுக்கு, சீர் அதிரசம், திரட்டுப் பால், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் முதலியவைச் செய்துத் தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

நெ. 24, 2வது மெயின் ரோடு
காந்தி நகர்
அடையாறு
சென்னை - 20
போன் : 4915662
4914213



"பில்லை நானே கொடுக்கறேன்னு என் நண்பன் சொன்னதை நம்பி ஹோட்டலுக்குப் போனது தப்பா போச்சு."

"ஏன்?"

"பில்லை நான் கொடுக்கறேன். பணத்தை நீ கொடுத்துடுன்னு கடைசில சொல்லிட்டானே!"

— இரா. வசந்தராசன்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

கோவிலென்றால் கர்ப்பக்கிரகம் மட்டும் தானா.... சாப்பாட்டுக் கூடம் வேண்டாமா?: மஞ்சுநாத ஸ்வாமி என்று கேள்விப் பட்டிருக்கிறாயா... அந்தக் கோவிலில் அன்னதானம் செய்வதைப் பார்த்திருக்கிறாயா? தர்மத்தில் சிறந்தது பிறருக்கு உணவிடுவது. அதனாலேயே மஞ்சுநாதர் கோவிலுக்கு தர்மஸ்தலம் என்று பெயர்.

"ஆயிரம் பேர் சாப்பிடுகிற சந்தோஷத்தைப் பார்த்திருக்கிறாயா? ஆயிரம் ஆயிரம் பேருக்குச் சாப்பாடு போடுகிற சந்தோஷத்தை அனுபவித்திருக்கிறாயா? யார் யாரோ சாப்பிடுவார்கள். நல்லவன் கெட்டவன்... நண்பன்... துரோகி... யார்யாரோ சாப்பிடுவார்கள். ஏதோ ஒரு வயிறு நிரம்பி உண்மையாய் சந்தோஷமாய், "அன்ன தாதா.... ஸுகிபவ" என்று சொல்லும். அப்போது நிஜமாகவே சுகப்படுவோம். அந்த வாக்கு பலிக்கும்.

"உண்பதும் உணவு போடுவதும் உயர்வான குணங்கள். இதை உபத்திரவப்படுத்துவது போல எதற்கு யூனியன்?"

இந்தக் கன்னடியர்களை ஒருங்கிணைத்து ஒரு வழிக்குக் கொண்டு வருவது போல சிரமமான காரியம் எதுவுமில்லை. தொழிலாளர்களில் தமிழர்களும் இருந்தார்கள். டிவியில் நல்ல படம் இருந்தால் யூனியனுக்கு வரமாட்டார்கள். குடித்து விட்டால் அமைதியாக இருக்க மாட்டார்கள். 'ஒரு லட்சியவெறி வேண்டாமா?' என்று கேட்டால் 'உங்கிட்ட லட்சியம் இருக்கு– எங்கிட்ட வெறி இருக்கு... ரெண்டு பேரும் ஒண்ணா சேர்ந்துட்டா லட்சிய வெறி வந்துரும்!' என்று கேலி பேசுவார்கள். எதுவுமே முக்கியப்படாத வாழ்க்கை தமிழர்களுடையது.

ஆனால் இங்கேயும் யூனியன் வீடராய் தொழிற்சங்கத்துக்கு மரியாதை கொடுத்தால்தான் மலையில் பிழைப்பு நடக்கும் என்கிற தன்மை ஏற்பட்டுவிட்டது. அதைக் காப்பாற்ற இடைவிடாது முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது. நாச்சியப்பன் செட்டியார் என்கிற தமிழ் பேசும் எஸ்டேட் முதலாளி இறந்து விட்டால் அங்கே மலையாளிதான் கட்டிக்காக்கிற மேஸ்திரியாக இருக்கிறான். நாற்பது தொழிலாளிகளில் இருபத்திநாலு பேர் கன்னடியர்கள். மீதியுள்ளோர் தமிழர்கள். மருந்துக்குக் கூட மலையாளி இல்லாத எஸ்டேட் அது. ஆனால் அந்த எஸ்டேட் வாசலில் யூனியன் கொடி இருக்கிறது. கிழிந்து சாயம் போய் கொம்பு நுனியில் சுருண்டு போய்க் கிடக்கிறது. வேறு கொடி மாற்ற வேண்டும். ஒரு தமிழன் சொத்து தடுமாறுகிறது. வாங்க ஆளிருக்கிறதா என்று மலையாளிகளிடம் விசாரிக்க வேண்டும். முதலாளி மலையாளியாக இருந்தால் தொழிலாளியும் மலையாளியாக மாறுவான். அங்கேயும் யூனியன் இயங்கும் என்றாலும் பயன்படுவது ஒரு மலையாளியாக இருக்கும். ஒரு மலையாளிக்காக ஒரு மலையாளி உழைப்பது சந்தோஷமான விஷயம்.

"உலக மலையாளிகளே ஒன்று சேருங்கள்" இப்படி கோஷம் போடுவதில்லை. ஆயினும் உள்ளுக்குள்ளே இப்படி ஒரு கோஷம் இருக்கத்தான் செய்கிறது.

"குருப்பு... எந்தா விசேஷம். சகாவு எவ்விடயானு போகுன்னு. ராத்திரி பார்ட்டி உண்டு குருப்பு. பட்ஷே, நீங்க வைகிட்டே வரணும்."

குருப் என்கிற மலையாளியை இன்னொரு மலையாளி மடக்கி அழைத்த போது மிகவும் சந்தோஷமாய் இருந்தது.

(தொடரும்)



"எங்க வீட்டில் நேற்று பயங்கர சண்டை!"

"முடிவிலே என்னாச்சு?"

"அப்பாவுக்கு ஆஸ்பத்திரியில் 'குளுகோஸ்' ஏத்திகிட்டு இருக்காங்க!"

— சீர்காழி வி. கௌரி






# டெபாசிட் திட்டங்கள்

| ஃபிக்சட் டெபாசிட் | | |
|---|---|---|
| காலம் | வட்டி விகிதம் (ஆண்டிற்கு) | குறைந்த பட்ச டெபாசிட் தொகை |
| ஓர் ஆண்டு | **24%** | ரூ.10,000/- |

ஊக்கத் தொகை 1%

| க்யூமுலேடிவ் டெபாசிட் | | | | |
|---|---|---|---|---|
| காலம் | டெபாசிட் தொகை | முதிர்வுத் தொகை | வருடாந்தர வட்டி | ஊக்கத் தொகை |
| 13 மாதம் | ரூ.10,000/- | ரூ.13,000/- | 27.70% | 1.5% |
| 25 மாதம் | ரூ.10,000/- | ரூ.16,000/- | 28.80% | 3.0% |
| 37 மாதம் | ரூ.15,000/- | ரூ.30,000/- | 32.4% | 4.5% |

## ஈஸ்வரி பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.**25,000**
இரு மடங்காகிறது
**37** மாதங்களில்
ரூ.**50,000/-**
ஊக்கப்பரிசு
**4** கிராம் தங்கக்காசு

## திருமலா பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.**50,000**
மும் மடங்காகிறது
**60** மாதங்களில்
ரூ.**1,50,000/-**
ஊக்கப்பரிசு
**8** கிராம் தங்கக்காசு

**ESWARI**

**ஈஸ்வரி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்**

(ஈஸ்வரி குரூப் நிறுவனங்கள்)

தலைமை & நிர்வாக அலுவலகம்: 4, எல்டாம்ஸ் ரோடு, முதல் மாடி, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி: 455349, 459557, 457583.

கிளைகள் : நெ. 13, ரட்டன் பஜார், பாரிமுனை, சென்னை-3. போன்: 560767,
49, வடக்கு உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-17. போன்: 8259061, 69, முதல் மாடி,
புரசைவாக்கம் நெடுஞ்சாலை, புரசைவாக்கம், சென்னை-7. போன்: 5324937, 5324940,
நெ. 72, ஜி.எஸ்.டி. ரோடு, குரோம்பேட்டை, சென்னை-44. போன்: 405845, நெ. 11, பாரதி சாலை,
திருவல்லிக்கேணி, சென்னை-5. போன்: 841187, நெ. 19/6, 4வது மெயின் ரோடு, முதல் மாடி,
நங்கநல்லூர், சென்னை-61. போன்: 2345891, நெ. 13, ஆற்காடு சாலை, சாலிக்கிராமம்,
சென்னை-93. போன்: 428650, நெ. 25, முதல் மாடி, ஜவஹர்லால் நேரு தெரு, பாண்டிச்சேரி-1. போன்: 31830.

எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்

**உங்கள் வளர்ச்சி ஈஸ்வரியுடன் வளரட்டும்!**

LOTUS/95

### கர்நாடகத்தில்...

# ஓர் அபாயத்தின் ஆரம்பம்!



நிர்வாகத்தை முடுக்கி விட்டு நல்ல பெயர் வாங்கியிருக்கிறார் தேவே கௌடா. அதே சமயம், செலவுகளைக் குறைக்கும்படி கடுமையான உத்தரவு போட்டிருக்கிறார். அமைச்சர்களுக்கோ தமக்கோ 'பாராட்டு விழா' நடத்தக் கூடாது என்றும் தடை விதித்திருக்கிறார்! வெளிநாட்டவர் கர்நாடகம் வந்து தொழில் தொடங்க பல திட்டங்கள் கையெழுத்தாகியுள்ளன. முன்னேற்றப் பாதையில் முதல்வர் மாநிலத்தை நடத்திச் சென்றாலும் சமீப காலமாக அவரது சில கொள்கை முடிவுகள் மிகவும் அச்சமூட்டும்படி உள்ளன.

முக்கியமாக, இன்றைய அவரது ஜனதாதள அரசின் "மண்ணின் மைந்தர்கள்" கொள்கை.

மகாராஷ்டிராவில் ஆட்சிக்கு வந்துள்ள சிவசேனாவை விட குறுகலான நோக்குடன் கொள்கை வகுத்துள்ளது ஜனதாதள அரசு.

அரசுப் பணி, தனியார் பணி, தொழில் நிறுவனங்கள் எதிலும் நூறு சத வேலை வாய்ப்பு கன்னடர்களுக்கே தரப்பட வேண்டும் என்று உத்தரவிட்டிருக்கிறார் கௌடா. இதில் 'மேல்'

●●

**மகாராஷ்டிராவில் ஆட்சிக்கு வந்துள்ள சிவசேனாவை விட குறுகலான நோக்குடன் கொள்கை வகுத்துள்ளது ஜனதாதள அரசு.**

●●

மட்ட முதல் பிரிவில் மட்டும் இருபது சதவிகிதம் 'மற்றவர்'களை நியமித்துக் கொள்ளலாம் என்று துளியூண்டு சலுகை!

பல நடைமுறைச் சிக்கல்கள் இதில் இருப்பது ஒருபுறம் இருக்க, அந்நியத் தொழில் புரட்சிக்கு கௌடா கதவு திறந்து விட்டிருப்பதால், இங்கே தொழில் தொடங்க வரும் வெளிநாட்டவர், திறமைசாலிகளைத் தேடுவார்களா? அரசின் கொள்கைக்குச் சலாமிட்டு அடிபணிவார்களா?

இது இப்படி இருக்க, கல்லூரி நுழைவுத் தேர்வுகளில் கன்னடர்களைத் தவிர இதரர்கள் எழுதக் கூடாது என்றொரு சட்டம் வேறு!

சென்ற ஆண்டு வெளி மாநில மாணவர்கள் கலந்து கொண்டும் கூட, இரண்டாயிரம் சீட்டுகளுக்கு மேல் காலியாக இருந்ததாகச் சொல்லப்பட்டது. இப்போது இப்படி ஒரு உத்தரவுக்குப் பின், கல்லூரிகளில் இனி மேசை, நாற்காலிகளுக்குத்தான் வகுப்பெடுக்க வேண்டி இருக்கும்!

நாடு பூராவும் மொழிவெறியும் மதவெறியும் தாண்டவமாடிக் கொண்டிருக்கிற வேளையில், ஒரு 'தேசியக் கட்சி' என்று சொல்லிக் கொள்ளும் ஜனதா தளத்தின் ஒரு மாநில முதல்வர் இத்தனை குறுகிய இன, மொழிக் கண்ணோட்டத்துடன் செயல்படுவது - இங்கு வாழும் சிறுபான்மையோருக்கு - மிகுந்த அபாயகரமான பின்விளைவுகளைத் தரக்கூடியதன் ஒரு ஆரம்பமாகவே தெரிகிறது!

— அமுதவன்

"அந்த வாத்தியார் "தமிழ்"ல வீக் போலிருக்கு!"

"எப்படி சொல்றே...?"

"கருப்பு; கறுப்பு எது சரின்னு கேட்டதுக்கு, dark ஆனதா இருந்தா வல்லினம் போட்டுக்கோ; light ஆனதா இருந்தா மெல்லினம் போட்டுக்கோன்னு சொல்லிட்டுப் போறார்டா!"

- புதுவண்டி ரவீந்திரன்



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 1995

## முதல் பரிசு ரூ. 1,500;
## இரண்டாவது பரிசு ரூ. 1,000;
## மூன்றாவது பரிசு
## (இரு கதைகளுக்குத் தலா ரூ. 500 வீதம்) ரூ. 1,000.

**ஆக மொத்தம் ரூ. 3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.**

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 6 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

# வந்து விட்டது பொய்யான நிஜம்!

ஐநூறு மில்லியன் டாலர். நாலே வருஷத்தில் சல்லிக்காக மீந்து போகாமல் அத்தனையும் செலவழித்தாக வேண்டும்... கம்ப்யூட்டர் ஆராய்ச்சிக்காக இந்தத் தொகையைத் தூக்கிக் கொடுத்தது அமெரிக்காவின் பாதுகாப்பு நிறுவனமான பெண்டகன்.

வாங்கிக் கொண்ட பித்துக்குளிகள் கறுகறுப்பாகப் பயணப்படி, பஞ்சப்படி கணக்குக் காட்டிக் கரைத்து விட்டு, 'பழைய ஆங்கில இலக்கியத்தில் கம்ப்யூட்டர் கூறுகள்' என்ற ரீதியில் கட்டுரை சமர்ப்பித்துக் கடையைக் கட்டாமல், மெய்யாலுமே ஆராய்ச்சி செய்ய உட்கார, வந்ததய்யா "வெர்ச்சுவல் ரியாலிட்டி."

நாம் ஒரு சவுகரியத்துக்காகப் 'பொய் மெய்' என்று கூப்பிடலாம்.

"வெர்ச்சுவல் ரியாலிட்டியை தரிசிக்க வாரும் என் ஆராய்ச்சிக் கூடத்துக்கு..."

மூக்குப் பொடியை உறிஞ்சிக்கொண்டே சொன்னார் கம்ப்யூட்டரில் மகாபண்டிதரான என் நண்பர் தேசிகாச்சாரி. (கம்ப்யூட்டர் நிபுணர் என்றால் பொடி போடக் கூடாது என்று எங்கேயாவது எழுதியிருக்கிறதா என்ன?)

தேசிகாச்சாரி இழுத்த இழுப்புக்குக் கூடவே போகும் போது, மனதில் சின்னச் சபலம். இந்த மாதிரி அறிவியல் ஆசாமிகளுக்கு அழகான பெண் உதவியாளர்கள் இருப்பார்களே...

ஆராய்ச்சிக்கூடம். நாலா பக்கமும் என் கண்கள் அழகியைத் தேடிக் கொண்டே இருக்க, தேசிகாச்சாரி தலையில் ஹெல்மெட் கவிழ்த்தார். என் இரண்டு கையிலும் கையுறைகள் ஏறின.

"மெல்ல நடந்து போய் அந்த நாற்காலியில் உட்காரும்..."

உட்கார்ந்தேன்.

குப்புற விழுந்தேன்.

பாண்டவரின் பளிங்கு மாளிகையில் பாஞ்சாலி போல தேசிகாச்சாரி சிரித்தார். பார்க்க வந்த துரியோதனன் போலத் தடுமாறி எழுந்தேன்.

"நாற்காலியின் பிம்பத்தின் மேல் உட்கார முயற்சி செய்தால், விழாமல் என்ன செய்வீர்?"

தேசிகாச்சாரி தலைக் கவசத்தைக் கழற்றினார்.

"வாரும்... பக்கத்து அறையில் சாவகாசமாக உட்கார்ந்து ஓய்வு எடும்..."

உட்கார, எதிரே உபன்யாசம் செய்யத் தயாராக தேசிகாச்சாரி.

"கம்ப்யூட்டரால் திரையில் காட்ட முடிவது இரண்டே பரிமாணம் தான்... நீளமும் அகலமும். இப்போ புதுசு புதுசாக கம்ப்யூட்டரில் மூன்று பரிமாண பிம்பம்... அசலாக



• பொய்மெய் கொண்டு கட்டிய வீடு...

நமக்குச் சுற்றிலும் பார்க்கிறது போல... பார்க்கிறவனைச் சுற்றிச் சூழ வேணும்... அவன் அதிலேயே அமிழ்ந்து நிசம் போல உணர வேணும்... கஷ்டப்பட்டு இது தான்டா வெர்ச்சுவல் ரியாலிட்டி என்று சாதித்துக் காட்டி விட்டார்கள். நீர் பத்து நிமிஷம் முன்னால் அனுபவித்துச் சுகப்பட்டீரே அது பொய் மெய்க்கு ஒரு சாம்பிள்..."

"பாவி மனுஷா...தலையில் கவசமெல்லாம் ஏற்பாடாக மாட்டிக் கிழே தள்ளி விட்டீரே... அடுக்குமா..."

"அது கவசமில்லை... ஹெட் மவுண்டட் டிவைஸ் என்ற தலையேறிய சாதனம். எச்எம்டி என்று சுருங்கின பெயர்... உள்ளே பொடி யூண்டு இரண்டு எல்சிடி திரைகள் ஒவ்வொரு கண்ணுக்கும் முன்னால் கண்ணாடி விரித்து வைக்கும். உம் தலை அசைவதை வைத்தும், நீர் முன்னால் நகர்வதை வைத்துப் கணத்தில் புதுக புதுசாக நாற்கா

• எச். எம்டி...






யின் தூர, பக்கத்து, பக்க வாட்டுத் தோற்றங்களை முப்பரிமாணத்தில் ஒரு கம்ப்யூட்டர் உருவாக்கி உமக்குக் காட்டியது. உருவாக்க சிக்னல் கொடுத்தது எச்எம்டிக்குள் இருக்கிற உபகரணங்கள்..."

உள்ளங்கையில் அரித்தது. கையுறையை அவசரமாகக் கழற்ற தேசிகாச்சாரி தடுத்தார்.

"மெல்ல... சென்சார் பிராப்ளமாயிடும்..."

"நான் 'பம்பாய்' எடுக்கலியே... கிளவுஸைத் தானே எடுக்கறேன்?"

"இது அந்த சென்சார் இல்லை. இந்தக் கையுறைகளும் விசேஷமானவை. போட்டாகுஜொரவ்ஸ் என்று பெயர். தகவல் கையுறை. உள்ளே எல்லாம் நூலாம் படையாக ஃபைபர் ஆப்டிக் இழைகள். மணிக்கட்டையும், ஒவ்வொரு விரலையும் இணைக்கிற இவற்றில் உள்ள சென்சார்கள் கையசைவை உடனுக்குடன் உணர்ந்து, கம்ப்யூட்டருக்கு சமிக்ஞை அனுப்பும். இவை மட்டும் இல்லாது போனால், நீர் அசைத்ததும் நாற்காலி கடகடவென்று சத்தம் போட்டு ஆடியிருக்காது. கம்ப்யூட்டர் எழுப்பின சத்தம் அது."

தேசிகாச்சாரி கொடுத்த புளியோதரையைச் சாப்பிட்டுக் கொண்டே கேட்டேன். "இந்த விட்டாலாச்சாரியா வேலையால் யாருக்கு என்ன பிரயோஜனம்?"

"டாக்டர்களுக்கு. ஆயிரம் ஆபரேஷன் பண்ணினதுக்கு அப்புறம் ஒரு டாக்டர், 'நான் அரை வைத்தியன்'னு சொல்லாமல் இருக்கப் பொய்மெய் கை கொடுக்கும்..."

"எப்படி?"

"ஒரு வெர்ச்சுவல் நோயாளியை... அதான் நோயாளியின் பிம்பத்தை அசல் மாதிரி கம்ப்யூட்டர் உருவாக்கித் தரும்... டாக்டர் அறுக்க ஆரம்பிக்க வேண்டியதுதான். எக்குத் தப்பா ரத்தக் குழாயை வெட்டிட்டா ரத்தம் பீச்சியடிக்கும். ஐயையோ... தப்பாயிடுத்தேன்னு கையைப் பின்னுக்கு இழுத்துட்டா, வெட்டினது பழையபடி நேரா ஒட்டிக்கும். திரும்ப ஆரம்பிக்கணும். இப்படியே தட்டுத்

தடுமாறி, வெட்டி ஒட்டி, பிரிச்சுத் தச்சு பத்து தடவை 'ஆபரேஷன்' பண்ணிட்டு, பதினொண்ணாம் தடவை கச்சிதமா செய்து முடிச்சதும் 'சபாஷ் வாத்யாரே'ன்னு கம்ப்யூட்டரே சர்ட்டிபிகேட் தர வைக்கலாம். டாக்டரும், கைதேர்ந்த நிபுணராக ஆபரேஷன் தியேட்டருக்குள்ளே நுழைவார், தன்னோட முதல் ஆபரேஷனை செய்ய...."

"இதெல்லாம் எங்கேபோய் முடியும்?" திகிலோடு கேட்டேன்.

"என்ன... நாளைக்கு உமக்கு மூக்கில் ஒரு ஆபரேஷன் செய்யணும்னு வைத்துக் கொள்ளும்.... நீர் பாட்டுக்கு மாம்பலத்தில் ஒரு கிளினிக்கில் படுத்திருப்பீர். தலைமாட்டில் சகல அறுவை சிகிச்சை உபகரணங்களும் இயங்கத் தயாரா இருக்கும். உமக்கு வேண்டப்பட்ட கைராசி டாக்டர் மாதுங்காவிலேயோ மடகாஸ்கரிலேயோ உட்கார்ந்து, இங்கே இருக்கப்பட்டதைப் பார்த்து, கருவிகளைக் 'கையில் பிடித்து' இயக்கி, ஆபரேஷனை வெற்றிகரமாகக் கம்ப்யூட்டர் உதவியோடு செய்து முடிக்கும் சாத்தியமும் உண்டு. இதுக்குப் பேர் டெலிசர்ஜரி. இதே மாதிரி, கண்காணாத தூரத்திலேருந்து நோயாளியை பரிசோதித்து மருந்து எழுதித் தர டெலிமெடிசின் வந்துட்டு இருக்கு... கம்ப்யூட்டர் யுகமய்யா..." தேசிகாச்சாரி உற்சாகமானார்.

"ஃபீஸை எப்படித் தருவதாம்?"

"அது டாக்டரின் கவலை... உமக்கெதற்கு..."

"டாக்டர் தவிர வேறு யாருக்கெல்லாம் பொய்மெய் உபயோகப்படும்?"

"கட்டடக்கலை நிபுணர்களுக்கு... வெர்ச்சுவல் ரியாலிட்டியில் ஒரு வீட்டை செங்கல் செங்கலாக நிறுத்தி உருவாக்க வேண்டியது... வீடு கட்ட நினைக்கிறவர் விருப்பப்படி ஸ்டோர் ரூமை வலப்பக்கம் நகர்த்தி, பால்கனியை இன்னும் உயர்த்தி, சமையல் கட்டில் அலமாரியில் பாத்திரம் வைத்து மூடித் திறந்து, கதவு போட்டு, பாத்ரூமில் பாசியில் வழுக்கி விழுந்து டைல்ஸ் போட்டு, இஷ்டப்படி மாற்றி மாற்றி பெயிண்ட் அடித்து... அரைமணியில் மனதுக்குப் பிடித்த வீட்டை டிசைன் செய்து விடலாம்...."

"வீட்டைக் கட்டாமலேயே பார்!"

சொல்லி விடாமல் தேசிகாச்சாரி அவசரமாக அடுத்த விஷயத்துக்குத் தாவினார்.

"கிரிக்கெட் மைதானமே இல்லாத கண்டாங்கிப் பட்டியில் கூட ஒரு சச்சின் டெண்டுல்கரை உருவாக்கப் பொய்மெய்யால் முடியும். கத்துக்க வர்ற பையன் தவிர மீதி பிளேயர்கள், விக்கெட் எல்லாம் கம்ப்யூட்டர் உருவாக்கித் தந்துடும்."

"பந்தைத் தேய்த்து ஏமாற்ற சொல்லித் தருமா?"

தேசிகாச்சாரி முறைத்துவிட்டுத் தொடர்ந்தார்.

"விமானம் ஓட்டக் கற்றுக் கொள்ள பைலட்டுகளை பொய்மெய் கொண்டு பழக்கலாம்..."

"அண்ணா சாலையில் இந்தப் பக்கம் பல்லவனும் அந்தப் பக்கம் அம்பாசிடரும் ராட்சத வேகத்தில் சீறிப்பாய, பின்னால் ஆட்டோ துரத்த, நடுவில் ஸ்கூட்டர் ஓட்டிக் கொண்டு போகச் சொல்லித் தர முடியுமா?"

"கஷ்டம்தான்... முயற்சி செய்யணும்... வேணுமானால் மேற்கு மாம்பலம் ஜுபிலி ரோடில் போளி சாப்பிட்டபடி, வெனிஸில் படகில் போகிற சவுகரியத்தை அனுபவிக்க பொய்மெய் மூலம் செய்யலாம். கம்ப்யூட்டரும் தகவல் தொடர்பும் சேர்ந்து எல்லா மாயாலோகத்தையும் எழுப்பிக் காட்டும்..."

"இந்த ஹெல்மெட்டும், கையுறையும் இல்லாமல் பொய்மெய்யை உருவாக்க முடியாதா?" என்று கேட்டேன்.

"ஏன் முடியாது? பனோரமிக் வீடியோ என்று முழு வட்டம் சுற்றிச் சுழல்கிற வீடியோ வந்து கொண்டிருக்கு... கிட்டத்தட்ட பொய்மெய் போல... கண்ணுக்குள்ளேயே நேரடியாக பிம்பத்தைப் போட ரெடினல் இமேஜிங் என்ற தொழில் நுட்பமும் தயாராகுது... அடுத்த தடவை நீர் இங்கே வரும்போது நிறையப் புது விஷயம் பார்க்கலாம்..."

"ரொம்ப வேண்டாம்... ஒரு விஷயம் மட்டும் கவனத்தில் வையும்... உட்கார வைக்கிறேன் பேர்வழி என்று விழுப் பண்ணினாலும் ஒத்தடம் கொடுக்கிற மாதிரி, 'அச்சச்சோ... அடிகிடி படலியே' என்று கொஞ்சும் குரலில் விசாரிக்க ஒரு அழகான...."

தேசிகாச்சாரி வாசலைக் காட்டினார்.

நான் 'புதுமொழி'யை முழுசாகச்

- இரா. முருகன்

---



"என் மாமனாருக்கு வரவர ஞாபக மறதி அதிகமாயிடுச்சு."

"அப்படியா?"

"மூணு மாசமா என் வீட்டிலே வந்து டேரா போட்டதுமில்லாம என்னிடமே எப்போ மாப்பிள்ளை ஊருக்குப் போகப் போறீங்கன்னு கேட்கிறாரு!"

-எம். அசோக்ராஜா

# பார்த்திபன் கனவு

## 23. அருவிப் பாதை

உதய சூரியனின் பொற் கிரணங்களால் கொல்லி மலைச்சாரல் அழகு பெற்று விளங்கிற்று. பாறைகள் மீதும் மரங்கள் மீதும் ஒரு பக்கத்தில் சூரிய வெளிச்சம் விழுவதும், இன்னொரு பக்கத்தில் அவற்றின் இருண்ட நிழல் நீண்டு பரந்து கிடப்பதும் ஒரு விசித்திரமான காட்சியாயிருந்தது. வான வெளியெங்கும் எண்ணிறைந்த பட்சிகளின் கலகலத்வனி பரவி ஒலித்தது. அதனுடன் மலையிலிருந்து துள்ளிக் குதித்து ஆடிப்பாடி வந்த அருவியின் இனிய ஒலியும் சேர்ந்து வெகு மனோகரமாயிருந்தது.

இந்த நேரத்தில் அந்த மலைச்சாரலுக்கு அருகில் இரண்டு உயர்ஜாதி வெண்புரவிகள் வந்து கொண்டிருந்தன. அவற்றின் மீது ஆரோகணித்திருந்தவர்கள் நமக்கு ஏற்கெனவே பழக்கமுள்ளவர்களான சிவனடியாரும் பொன்னனுந்தான்.

அவர்கள் அந்தக் காட்டாற்றின் கரையோரமாகவே வந்து கொண்டிருந்தார்கள்; பேசிக் கொண்டு வந்தார்கள்.

சிவனடியார், சற்றுத் தூரத்தில் மொட்டையாக நின்ற பாறையைச் சுட்டிக்காட்டி, "பொன்னா! அந்தப் பாறையைப் பார்! அதைப் பார்த்தால் உனக்கு என்ன தோன்றுகிறது?" என்று கேட்டார்.

''ஒன்றும் தோன்றவில்லை, சுவாமி! மொட்டைப் பாறை என்று தோன்றுகிறது. அவ்வளவுதான்.''

''எனக்கு என்ன தோன்றுகிறது, தெரியுமா? காலை மடித்துப் படுத்துத் தலையைத் தூக்கிக் கொண்டிருக்கும் நந்தி பகவானைப் போல் தோன்றுகிறது. இப்போது அந்தப் பாறையின் நிழலைப் பார்!"

பொன்னன் பார்த்தான். அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "சுவாமி நந்தி மாதிரியே இருக்கிறதே!'' என்றான்.

"சாதாரணக் கண்ணுக்கும், சிற்பியின் கண்ணுக்கும் இதுதான் வித்தியாசம். பொன்னா! சிற்பி ஒரு பாறையைப் பார்த்தானானால் அதில் ஒரு யானையையோ, சிங்கத்தையோ அல்லது ஒரு தெய்வீக வடிவத்தையோ காண்கிறான். இன்னின்ன மாதிரி வேலை செய்தால் அது அத்தகைய உருவத்தை அடையும் என்று சிற்பியின் மனதில் உடனே பட்டுவிடுகிறது...''

பொன்னன் குறுக்கிட்டு, "சுவாமி! நாங்கள்...'' என்றான்.

"ஆமாம்! நான் ஒரு சிற்பிதான்! உலகத்தில் வேறு எந்த வேலையைக் காட்டிலும் சிற்ப வேலையிலேதான் எனக்குப் பிரியம் அதிகம்.... இப்போது நான் எடுத்துக் கொண்டிருக்கும் வேலையை மட்டும் பூர்த்தி செய்து விட்டேனானால்.... இருக்கட்டும், பொன்னா! மாமல்லபுரம் நீ பார்த்திருக்கிறாயா?'' என்று சுவாமியார் கேட்டார்.

"ஒரே ஒரு தடவை பார்த்திருக்கிறேன், சுவாமி!"

"அதைப் பார்த்த போது உனக்கு என்ன தோன்றியது?"

"சொப்பன லோகத்தில் இருப்பதாகத்தான் தோன்றியது..."

"ஆனால் அந்தச் சிற்பங்கள் உண்மையில் சொப்பனமில்லை! நாம் உயிரோடிருப்பதை விட அதிக நிஜம். கல்லிலே செதுக்கிய அச் சிற்ப வடிவங்கள் நம்முடைய காலமெல்லாம் ஆன பிறகு, எத்தனையோ காலம் அழியாமல் இருக்கப் போகின்றன; நமக்கு ஆயிரம் வருஷத்துக்குப் பின்னால் வரும் சந்ததிகள் பார்த்து மகிழப் போகிறார்கள். ஆகா! ஒரு காலத்தில், பொன்னா! மாமல்ல

அமரர் கல்கி

புரம் மாதிரியே இந்தத் தமிழகம் முழுவதையும் ஆக்க வேண்டுமென்று நான் கனவு கண்டு கொண்டிருந்தேன்...."

"என்ன, தாங்களும் கனவு கண்டீர்களா?" என்றான் பொன்னன்.

"ஆமாம்; உங்கள் பார்த்திப மகாராஜா மட்டுந்தான் கனவு கண்டார் என்று நினைக்கிறாயா? அவர் சோழ நாட்டின் பெருமையைப் பற்றி மட்டுமே கனவு கண்டார். நானோ தமிழகத்தின் பெருமையைக் குறித்துக் கனவு கண்டு கொண்டிருந்தேன்... பார், பொன்னா! புண்ணிய பூமியாகிய இந்தப் பரத கண்டம் வடநாடு, தென்னாடு என்று பிரிவுபட்டிருக்கிறது. கதையிலும், காவியத்திலும், இதிகாசத்திலும் வடநாடுதான் ஆதிகாலத்திலிருந்து பெயர் பெற்று விளங்குகிறது. வடநாட்டு மன்னர்களின் பெயர்கள்தான் பிரசித்தியடைந்திருக்கின்றன. பாடலிபுரத்துச் சந்திரகுப்தன் என்ன, அசோக சக்கரவர்த்தி என்ன, விக்கிரமாதித்தன் என்ன! இவர்களுக்குச் சமமாகப் புகழ் பெற்ற தென்னாட்டு ராஜா யார் இருந்திருக்கிறார்கள்? நம்முடைய காலத்திலேதான், வடநாட்டு ஹர்ஷ சக்கரவர்த்தியின் புகழ் உலகெல்லாம் பரவியிருப்பது போல் மகேந்திர பல்லவரின் புகழ் பரவியிருந்தது என்று சொல்ல முடியுமா? தென்னாடு இவ்விதம் பின்னடைந்திருப்பதன் காரணம் என்ன? இந்தத் தென்னாடானது ஆதிகாலம் முதல் சோழ நாடு, சேர நாடு, பாண்டிய நாடு என்று பிரிந்து கிடந்ததுதான், காரணம். பெரிய இராஜ்யம் இல்லாவிட்டால், பெரிய காரியங்களைச் சாதிக்க முடியாது. பெரிய காரியங்களைச் சாதிக்காமல் பெரிய புகழ் பெறவும் முடியாது. வடநாட்டில் ஹர்ஷ சக்கரவர்த்தியின் இராஜ்யமானது, நீளத்திலும் அகலத்திலும் இருநூறு காத தூரம் உள்ளதாயிருக்கிறது. இந்தத் தென்னாட்டிலோ பத்துக் காதம் போவதற்குள்ளாக மூன்று ராஜ்யத்தை நாம் தாண்ட வேண்டியிருக்கிறது. இந்த நிலைமை உதவாது - தமிழகம் முழுவதும் ஒரே மகாராஜ்யமாயிருக்க வேண்டும் - தமிழகத்தின் புகழ் உலகெல்லாம் பரவ வேண்டும் என்று மகேந்திர பல்லவர் ஆசைப்பட்டார். நானும் அந்த மாதிரி கனவுதான் கண்டுகொண்டிருந்தேன். என் வாழ்நாளில் அந்தக் கனவு நிறைவேறலாம் என்று ஆசையுடன் நம்பியிருந்தேன். ஆனால், 'அந்த ஆகாசக் கோட்டையானது ஒரே ஒரு மனுஷனின் சுத்த வீரத்துக்கு முன்னால் இடிந்து, தகர்ந்து போய் விட்டது."



"சுவாமி! யாரைச் சொல்லுகிறீர்கள்?" என்றான் பொன்னன்.

"எல்லாம் உங்கள் பார்த்திப மகாராஜா வைத்தான்! ஆகா! அந்த வெண்ணாற்றங் கரைப் போர்க்களம் இப்போது கூட என் மனக்கண் முன்னால் நிற்கிறது. என்ன யுத்தம்! என்ன யுத்தம்! வெண்ணாறு அன்று இரத்த ஆறாக அல்லவா ஓடிற்று? பூரண சந்திரன் வெண்ணிலாவைப் பொழிந்த அந்த இரவிலே, அந்தப் போர்க்களந்தான் எவ்வளவு பயங்கரமாயிருந்தது? உறையூரிலிருந்து கிளம்பி வந்த பத்தாயிரம் வீரர்களில் திரும்பிப் போய்ச் செய்தி சொல்வதற்கு ஒருவன் கூட மிஞ்சவில்லை என்றால், அந்தப் போர் எப்படி இருந்திருக்க வேண்டும் என்று பார்த்துக் கொள்!" என்று சுவாமியார் ஆவேசத்துடன் பேசினார்.

"ஐயோ! அந்தப் பத்தாயிரம் வீரர்களில் ஒருவனாயிருக்க எனக்குக் கொடுத்து வைக்கவில்லையே!" என்றான் பொன்னன்.

"போரில் உயிரை விடுவதற்கு வீரம் வேண்டியதுதான். பொன்னா! ஆனால், உயிரோடிருந்து உறுதி குலையாமல் இருப்பதற்கு அதைக் காட்டிலும் அதிக தீரம் வேண்டும். அந்தத் தீரம் உன்னிடம் இருக்கிறது! உன்னைக் காட்டிலும் அதிகமாக வள்ளியிடம் இருக்கிறது; நீங்களும் பாக்கியசாலிகள்தான்!" என்றார் சுவாமியார்.

"சுவாமி! வெண்ணாற்றங்கரைப் போரைப் பற்றி இன்னும் சொல்லுங்கள்!" என்றான் பொன்னன்.

இந்த வீரப்போரைக் குறித்தும், பார்த்திப மகாராஜா அந்திய காலத்தில் சிவனடியாரிடம் கேட்ட வரத்தைப் பற்றியும் எவ்வளவு தடவை கேட்டாலும் அவனுக்கு அலுப்பதில்லை.

சிவனடியாரும் அதைச் சொல்ல அலுப்பதில்லையாதலால், அந்தக் கதையை மறுபடியும் விவர



மாகச் சொல்லிக் கொண்டு வந்தார்.

சற்று நேரத்துக்கெல்லாம் அவர்கள், காட்டாறானது சிற்றருவியாகி மலை மேல் ஏறத் தொடங்கியிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்து விட்டார்கள். இதற்கு மேல் குதிரைகளின் மீது போவது இயலாத காரியம். எனவே மலைச்சாரலில் மரங்கள் அடர்த்தியாயிருந்த ஓர் இடத்தில் குதிரைகளை அவர்கள் விட்டார்கள். "இவற்றை மரத்தில் கட்ட வேண்டாமா?" என்று பொன்னன் கேட்டதற்கு "வேண்டாம்" என்றார் சிவனடியார்.

"இந்த உயர்ஜாதிக் குதிரைகளின் அறிவுக் கூர்மை அநேக மனிதர்களுக்குக் கூட வராது பொன்னா! உங்கள் இளவரசன் ஆற்று வெள்ளத்தில் போனதும் உனக்கு முன்னால் இந்தப் புஷ்பகம் வந்து எனக்குச் செய்தி சொல்லிவிடவில்லையா? இவ்விடத்தில் நாம் இந்தக் குதிரைகளை விட்டுவிட்டுப் போனோமானால், அந்தண்டை இந்தண்டை அவை அசைய மாட்டா. கட்டிப் போட்டால்தான் ஆபத்து. துஷ்டமிருகங்கள் ஒரு வேளை வந்தால் ஓடித் தப்ப முடியாதல்லவா?" என்று கூறிவிட்டு இரண்டு குதிரைகளையும் முதுகில் தடவிக் கொடுத்தார். பிறகு இருவரும் அருவி வழியைப் பிடித்துக் கொண்டு மலை மேலே ஏறினார்கள்.

பெரிதும் சிறிதுமாயும், முண்டும் முரடுமாயும் கிடந்த கற்பாறைகளை வெகு லாகவமாகத் தாண்டிக் கொண்டு சிவனடியார் சென்றார். தண்ணீரில் இறங்கி நடப்பதிலாவது, ஒரு பாறையிலிருந்து இன்னொரு பாறைக்குத் தாண்டுவதிலாவது அவருக்கு ஒருவிதமான சிரமமும் இருக்கவில்லை. அவரைப் பின்தொடர்ந்து போவதற்குப் பொன்னன் திணற வேண்டியதாக இருந்தது.

"சுவாமி! தங்களுக்குத் தெரியாத வித்தை இந்த உலகத்தில் ஏதாவது உண்டா?" என்று பொன்னன் கேட்டான்.

"ஒன்றே ஒன்று உண்டு, பொன்னா! கொடுத்த வாக்கை நிறைவேற்றாமல் இருப்பது என்னால் முடியாத காரியம்" என்றார் சிவனடியார்.

அவர் கூறியதைப் பொன்னன் சரியாகத் தெரிந்து கொள்வதற்குள், "ஆமாம், உங்கள் பார்த்திப மகாராஜாவுக்கு நான் கொடுத்த வாக்கினால் என்னுடைய வாழ்க்கை - மனோரதமே எப்படிக் குட்டிச்சுவராய்ப் போய் விட்டது, பார்!" என்றார்.

"அதெப்படி, சுவாமி! முன்னேயும் அவ்விதம் சொன்னீர்கள்! பார்த்திப மகாராஜாவினால் உங்களுடைய காரியம் கெட்டுப் போவானேன்?" என்று கேட்டான் பொன்னன்.

"வாதாபியிலிருந்து திரும்பி வந்த போது, தென்னாடு முழுவதையும் ஒரு பெரிய மகாராஜ்யமாக்கி விட வேண்டுமென்ற எண்ணத்துடனேயே வந்தேன். இந்தச் சின்னஞ்சிறு தமிழகத்தில் ஒரு ராஜாவுக்கு மேல் - ஒரு இராஜ்யத்துக்கு மேல் இடங்கிடையாது என்று கருதினேன். சோழ, சேர, பாண்டியர்களின் நாமதேயமே இல்லாமல் பூண்டோடு நாசம் செய்து விட்டுத் தமிழகத்தில் பல்லவ இராஜ்யத்தை ஏகமகாராஜ்யமாகச் செய்து விட வேண்டுமென்று சங்கல்பம் செய்து கொண்டிருந்தேன். ஆனால், என்ன பிரயோஜனம்? பார்த்திபனுடைய சுத்த வீரமானது என் சங்கல்பத்தை அடித்துத் தள்ளி விட்டது. அவனுடைய மகனைக் காப்பாற்றி வளர்க்க - சுதந்திர வீர புருஷனாக வளர்க்க - வாக்குக் கொடுத்து விட்டேன். சுதந்திர சோழ இராஜ்யத்தை ஸ்தாபிப்பதற்கு நானே முயற்சி செய்ய வேண்டியதாகிவிட்டது!

## அருள்வாக்கு

பல மூர்த்திகளுக்கும் காஞ்சி முக்கிய க்ஷேத்திரமாயிருந்தாலும் தேவீ க்ஷேத்திரம் என்றுதான் அதற்கு அதிமுக்கியத்துவம். சக்தி பீடங்களை மூன்று, பதினெட்டு, முப்பத்தாறு, ஐம்பத்தொன்று, ஐம்பத்தாறு, அறுபத்துநாலு, தொண்ணூற்றாறு, நூற்றியெட்டு, ஆயிரத்து நானூறு என்று பலவிதமாகச் சொல்வதுண்டு. இந்த எல்லாவற்றிலுமே முக்கியமான ஒன்றாக வருவது காஞ்சியிலுள்ள காமபீடம் என்ற காமகோடி பீடம். அம்பாளின் நாபி பீடம் அது. சரீரத்தில் மத்ய ஸ்தானமாயிருப்பது நாபி. அப்படி லோகத்திற்கே இருப்பது காஞ்சி. காஞ்சி என்றால் ஒட்டியாணம். "மேரு தந்த்ரம்", "காமாக்ஷீ விலாஸம்", "காஞ்சீ மஹாத்ம்யம்" ஆகிய நூல்களில் இப்படிச் சொல்லியிருக்கிறது.

**"நேத்து அந்த டாக்டர் செஞ்ச ஆபரேஷன் எப்படிங்க?"**

**"அதை ஏன் கேக்கறீங்க, கொன்னுட்டார் போங்க!"**

**- வி. டி. பசுபதி**





ஸகல க்ஷேத்திரங்களிலுள்ள அம்பாளுடைய சக்தி கலைகளுக்கெல்லாம் கேந்த்ர ஸ்தானமாயிருப்பது காஞ்சி காமாக்ஷிதான்! அந்த எல்லா பல்புக்கும் இவள்தான் ஜெனரேட்டர்! இதைத் தெரிவிப்பதாகத்தான் காஞ்சீபுர வட்டாரத்தில் ஐம்பதுக்கு மேலே சிவன் கோவில்கள் இருந்தாலும் எதிலேயும் அம்மன் ஸந்நிதியே இல்லை! காம கோஷ்டத்திலோ அம்பாள் மட்டுமாக இருக்கிறாள்! ஸுந்தரேச்வரர் கோவிலில் மீநாக்ஷி, ஜம்புகேச்வரர் கோவிலில் அகிலாண்டேச்வரி, கபாலீச்வரர் கோவிலில் கல்பகாம்பா என்கிற மாதிரியெல்லாம் இல்லாமல், கூட ஈச்வர ஸந்நிதியில்லாமல், அம்பாள் மட்டும் இருக்கிறாள். காஞ்சியில் ஏகாம்பரர், வரதர் உள்பட எவருக்கும் இல்லாத பெருமையாகத் தான் மட்டுமே நாலு பக்கமும் கோபுரமும், கோபுர வாசலும், ராஜ வீதிச் சுற்றுக்களும் கொண்ட ராஜ ராஜேச்வரியாக இருக்கிறாள்!

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

இப்போது நினைத்தால், ஏன் அந்தப் புரட்டாசிப் பௌர்ணமி இரவில் போர்க்களத்தில் பிரவேசித்து பார்த்திபனுடைய உடலைத் தேடினோம் என்று தோன்றுகிறது. இதைத்தான் விதி என்று சொல்கிறார்கள் போலிருக்கிறது."

இவ்விதம் பேசிக் கொண்டே பொன்னனும் சிவனடியாரும் மேலே மேலே ஏறிச் சென்றார்கள். சூரியன் உச்சி வானத்தை அடைந்த போது செங்குத்தான பாறையிலிருந்து அருவி 'ஹோ' என்ற இரைச்சலுடன் விழுந்து கொண்டிருந்த இடத்தை அவர்கள் அடைந்தார்கள். அதற்கு மேல் அருவிப் பாதையில் போவதற்கு வழியில்லை என்பதைப் பொன்னன் தெரிவிக்க, சிவனடியார் சிந்தனையில் ஆழ்ந்தவராய் அங்குமிங்கும் பார்க்கத் தொடங்கினார்.

அருவி விழுந்தோடிய இடத்துக்கு இருபுறமும் கூர்ந்து பார்த்ததில் காட்டு வழி என்று சொல்லக்கூடியதாக ஒன்றும் தென்படவில்லை. இருபுறமும் செங்குத்தாகவும் முண்டும் முரடுமாகவும் மலைப் பாறைகள் உயர்ந்திருந்ததுடன், முட்செடிகளும் கொடிகளும் நெருங்கி வளர்ந்து படர்ந்திருந்தன. அந்தச் செடி கொடிகளையெல்லாம் சிவனடியார் ஆங்காங்கு விலக்கிப் பார்த்துக் கொண்டு கடைசியாக அருவி விழுந்து கொண்டிருந்த இடத்துக்குச் சமீபமாக வந்தார். அருவியின் தாரை விழுந்த இடம் ஒரு சிறு குளம் போல் இருந்தது. அந்தக் குளத்தின் ஆழம் எவ்வளவு இருக்குமோ தெரியாது. தாரை விழுந்த வேகத்தினால் அலைமோதிக் கொண்டிருந்த அந்தக் குளத்தைப் பார்க்கும்போதே மனத்தில் திகில் உண்டாயிற்று. குளத்தின் இருபுறத்திலும் பாறைச் சுவர் செங்குத்தாக இருந்த படியால் நீர்த் தாரை விழும் இடத்துக்கு அருகில் போவது அசாத்தியம் என்று தோன்றிற்று. ஆனால் சிவனடியார் அந்த அசாத்தியமான காரியத்தைச் செய்யத் தொடங்கினார்.

அந்த அருவிக் குளத்தின் ஒரு பக்கத்தில் ஓரமாக பாறைச் சுவரைக் கைகளால் பிடித்துக் கொண்டும் முண்டு முரடுகளில் காலை வைத்துத் தாண்டியும், சில இடங்களில் தண்ணீரில் இறங்கி நடந்தும் சில இடங்களில் நீந்தியும் அவர் போனார். இதைப் பார்த்துப் பிரமித்துப் போய் நின்ற பொன்னன், கடைசியாகச் சிவனடியார் தண்ணீர் தாரைக்குப் பின்னால் மறைந்ததும் "ஐயோ!" என்று அலறி விட்டான். "ஒருவேளை போனவர் போனவர்தானா? இனிமேல் திரும்ப மாட்டாரோ?" என்று அவன் அளவில்லாத ஏக்கத்துடனும் திகிலுடனும் நின்றான். நேரமாக ஆக அவனுடைய தவிப்பு அதிகமாயிற்று. சாமியாருக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் என்னென்ன விபரீதங்கள் விளையும் என்பதை நினைத்த போது அவனுக்குத் தலைசுற்றத் தொடங்கியது. 'அவரை விட்டு விட்டு நாம் திரும்பிப் போவதா? முடியாத காரியம். நாமும் அவர் போன இடத்துக்கே போய்ப் பிராணனை விடலாம், எது எப்படிப் போனாலும் போகட்டும்' என்று துணிந்து பொன்னனும் அந்தக் கிடுகிடு பள்ளமான குளத்தில் இறங்கினான்.

(தொடரும்)



# தீனியர்

**வீ**ட்டுக்குள் நுழைவதற்குப் பயமாக இருந்தது.

வீட்டு வாடகை, மளிகைக் கடைப் பாக்கி, நந்துவின் ட்யூஷன் ஃபீஸ்!

இவை நினைவில் நின்றவை. பிரதான பயமுறுத்தல்கள். அப்புறம் எத்தனையோ இத்யாதிகள்.

புதியதாய் உள்ளே இன்னும் எது காத்திருக்கிறதோ!

இடது கையில் மடிந்து தொங்கிய கறுப்பு கோட்டை பிடித்தவாறே செருப்பைக் கழற்றினான் லாயர் சிவநேசன்.

செருப்புச் சத்தம் கேட்டதும் திறந்த கதவின் வழியே நந்துவின் தலை எட்டிப் பார்த்தது.

"அம்மா டாடி வந்தாச்சு."

அவனுக்கு எட்டு வயசு.

முன்பெல்லாம் சிவநேசன் வருகைக்காகத் தெருவில் காத்திருப்பான். ஓடிவந்து காலைக் கட்டிக் கொள்வான்.

அப்போதெல்லாம் கையில் நந்துவுக்காக குறைந்த பட்சம் ஒரு பிஸ்கெட் பாக்கெட்டாவது இருக்கும். இப்போது அவன் எட்டிப் பார்ப்பதோடு சரி. சில சமயம் அதுவும் கிடையாது.

அப்பா வெறுங்கையோடுதான் வருவார் என்பது பழகி விட்டது.

கறுப்பு கோட்டை நாற்காலியில் போட்டு விட்டு, கால் அலம்ப பாத்ரூமுக்குப் போனான்.

'வழியில் மனைவி மீனாட்சி எதிர்ப்பட்டாள்.

முகத்தை ஏறெடுத்துப் பார்க்காமல் அவளைக் கடந்தான்.

மீனாட்சியின் பார்வையில் ஒரு விமர்சனம் கூடிக் கொண்டே வருவதாக அவருக்குத் தோன்றியது.

பாத்ரூமிலிருந்து நேராக அறைக்குப் போய் உடை மாற்றிக் கொள்கிறவரை வீட்டில் ஒரு நிசப்தம் நிலவுவதை அவனே கவனித்தான்.

நந்து பாடம் படித்துக் கொண்டிருந்தான். வழக்கமாக இயங்கும் டீ.வி. கூட மௌனம் சாதித்தது.

என்னவோ நடந்திருக்கிறது!

ஃபேனைப் போட்டு விட்டு அறையில் கட்டில் மேலேயே உட்கார்ந்தான்.

அவன் வெளியே வராமல் அப்படி உட்கார்ந்திருந்தால் மூட் அவுட் என்று மீனாட்சிக்குப் புரியும். அவளாக காப்பித் தம்ளரோடு உள்ளே நுழைவாள்.

இன்றும் வந்தாள்.

காப்பி இல்லை. டீ.

காப்பித்தூள் தீர்ந்து விட்டது என்று புரிந்து கொண்டான். டபராவை வாங்கினான்.

நிமிர்ந்து பார்த்தான்.

அவள் முகத்தில் விமர்சனம் இல்லை. ஒரு வருத்தம் நிழலாடியது. கசப்பான வருத்தம்.

"என்ன மீனாட்சி?"

"டீயைக் குடிங்கோ."

என்னமோ இருக்கிறது. புரிந்தது.

டீயைக் குடித்தான். டபராவை ஓரமாக வைக்கப் போனபோது, அவள் கையில் வாங்கிக் கொண்டாள்.

"பாங்க் நோட்டீஸ் வந்திருக்கு."

"எந்த பாங்க்?"

மீனாட்சி ஷெல்பிலிருந்து ஒரு கவரை எடுத்து நீட்டினாள். வாங்கிப் பிரித்தான் சிவநேசன்.

டவுன் கோ-ஆப்ரேடிவ் பாங்க்.

இரட்டை வடச் சங்கிலியை வைத்து ஒரு வருஷம் முடிந்து விட்டது. மீட்காவிட்டால் ஏலத்தில் விடப்படும் என்ற வழக்கமான நோட்டீஸ்.

போன வருஷமும் இப்படி ஒரு நோட்டீஸ் இதற்கே வந்து இதே நகையை வட்டியோடு சேர்த்துப் பணம் கட்டாமல் மீண்டும் வைத்திருந்தது.

இப்போது சுமை பெரிதாகி விட்டது!

என்ன செய்யலாம்?

நோட்டீஸைக் கவரில் போட்டு விட்டுத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டே யோசித்தான்.

மௌனமாக அவனையே பார்த்துக் கொண்டிருந்த மீனாட்சி பேசினாள்.

"முரஹரி வந்திருந்தார்!"

"எப்போ?"

"நீங்க வர்றதுக்கு அரை மணிக்கு முன்னாடி."

"அதை முன்னாடியே சொல்றதுதானே!' என்று எரிந்து விழத் தோன்றியது. அடக்கினான்.

கோர்ட்டுக்குப் போய் கைநிறையச் சம்பாதிக்காத லாயர் கணவனுக்கு, எரிந்து விழுகிற உரிமை இல்லை.



முகத்தைச் சாதாரணமாக்கிக் கொண்டு "என்னவாம்? ஏதாவது சொன்னானா?"

"புதுசா ஒண்ணும் சொல்லலே!"

சிவநேசன் மீனாட்சியையே உற்றுப் பார்த்தான்.

"வர்ற ஞாயிற்றுக் கெழமை ஒங்க சீனியருக்கு அஞ்சாவது டெத் அனிவர்ஸரியாம்!"

சிவநேசன் திரும்பி காலண்டரைப் பார்த்தான்.

அந்த ஏப்ரல் 9!

விஷயத்தை அவளும் சொல்லாமல் சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

"வேற ஒண்ணும் சொல்லலியா?"

"உங்களை உடனே வீட்டுக்கு வரச் சொன்னார்!".

அவளையும் கையிலிருந்த பாங்க் நோட்டீஸையும் மாறி மாறிப் பார்த்தான்.



இது முரஹரியின் முற்றுகை.

அவர்கள் இருவரின் சீனியர் சிந்து மாதவன் காலமாகி அந்த சேம்பர் வெறிச்சோடி, ஜூனியர்கள் ஆளுக்கு ஒரு திசையில் சிதறியோடி ஐந்து வருஷமாகி விட்டது. கூடு கலைந்து ஹோவென்று வெறிச்சோடி விட்டது.

முரஹரி பின்னால் வந்தவன்.

வாதத் திறமையோ, சட்ட அறிவோ சுத்தமாகக் கிடையாது.

வாசாலகம். கவர்ச்சியான தோற்றம். இனிக்க இனிக்கச் சிரித்துக் கொண்டே பேசும் சாதுரியம். மூலதனம் இவ்வளவுதான்!

இப்போது இவற்றை வைத்துக் கொண்டே ஓட்ட முடிகிறது!

அதிக நாள் தள்ள முடியாது. அவனுக்கே தெரியும். ஒரு பின்பலம் வேண்டும். சிவநேசனின் அபாரமான சட்ட அறிவு. லா பாயிண்டுகளைக்

ஜெயராஜ்



## பெண்கள் விரும்புவது...

**ப**வேரியா நாட்டின் மீது காண்ட்ராட் என்ற பேரரசன் படையெடுத்து வெற்றி பெற்றான். தலை நகரை விட்டு வெளியே செல்ல ஆண்கள் அனுமதிக்கப்படவில்லை! ஆனால் பெண்கள் மட்டும், தங்களால் சுமந்து செல்ல முடியும் அளவுக்கு முதுகில் சுமையுடன் வெளியேறிச் செல்ல அனுமதி தந்து விட்டான்! அரசகுலப் பெண்கள் முதல் அனைத்துப் பெண்களும் பொன், பொருள் போன்றவற்றை உதறித் தள்ளிவிட்டுத் தங்கள் கணவன்மார்களை முதுகில் சுமந்தபடி வெளியேற ஆரம்பித்தனர்! இது கண்ட பேரரசன், தான் வென்ற நாட்டைப் பவேரியா மன்னனிடமே ஒப்படைத்து விட்டுத் திரும்பினான்!

**'அறிஞர்கள் வாழ்வில் நடந்த அதிசயங்கள்' என்ற நூலில் இருந்து – உடுமலை எஸ். பொன்னுசாமி.**

---

கழுகுப் பார்வையில் கொத்தியெடுத்து சரஞ் சரமாக அடுக்குகிற சாகசம். கூண்டில் சாட்சிகளைத் தத்துப் பித்தென்று உளறவைக்கிற விசாரணை உத்தி. இவ்வளவு கிடைத்தால் கொடி கட்டி விடுவான் முரஹரி.

சேதுமாதவனின் சேம்பரில் மீண்டும் 'க்ளையண்டு' களின் கலகலப்பு கூடிவிடும்.

"எப்ப வரச் சொன்னான்?"

"இப்பவே... இமீடியட்டா!"

பழக்க வாசனையால் சிவநேசனின் பார்வை ஹால் சுவரில் தொங்கிய வால் க்ளாக்கின் மீது தாவியது.

கடிகாரம் மூன்று மணி காட்டியது.

நின்று ஒரு வாரமாயிற்று.

எடுத்துக் கொண்டு போய் க்ளாக் ரிப்பேரரிடம் கொடுக்க பயம்! அவன் பாட்டுக்கு நூறு நூற்றைம்பது என்று கூசாமல் சொல்லி விடுவான்.

எழுந்து போய் டயல் மங்கிய தன் வாட்சைப் பார்த்தான். மணி ஏழு.

வீட்டில்தானிருப்பான்!

'போக வேண்டுமா?'

என்ன அவசரம்?

மேஜைமேலிருந்த பாங்க் நோட்டீஸ் போகச் சொல்லியது.

ஒரு தீர்மானத்துக்கு வந்து முகம் அலம்பி புத்துணர்ச்சி பெற்று டிரெஸ் மாட்டிக் கொண்டு வெளியேறினான்.

பத்து நிமிஷ நடையில் முரஹரி வீடு.

போர்ட்டிகோவில் புது மாருதி நின்றிருந்தது.

'மார்பிள்' படிகள். காலிங்பெல்லை அமுத்தினான்.

பத்துப் பதினைந்து விநாடி தாண்டி, கதவு திறந்தது.

உள்ளேயிருந்து ஒரு மெல்லிய 'பர்ஃப்யூம்' வாசனை தொடர, பட்டும் வைரமுமாக வெளியே வந்தாள் சகுந்தலா. முரஹரியின் மனைவி.

"அடடே... வாங்க வாங்க."

விசாலமான ஹாலில் குஷன் சோபாவில் அவனை உட்கார வைத்து விட்டு "என்ன சாப்பிடறீங்க...? காபியா, டீயா... கூலா ஹாட்டா?" என்றாள்.

"ஒண்ணும் வேண்டாங்க. இப்பத்தான் வீட்டிலே டீ சாப்டுட்டு வர்றேன்!"

"அப்போ 'கூலா' கொண்டு வர்றேன்" என்று அவள் உள்ளே போகவும் முரஹரி வெளியே வந்தான்.

"ஹலோ சிவா சார்!"

முரஹரி குளுகுளுவென்று ஹிந்தி நடிகன் மாதிரி உயரமாய், சிவப்பாய் சற்று செயற்கைப் புன்னகையோடு நின்றான்.

அவருக்குப் பக்கத்தில் வந்து மிகவும் நெருக்கம் காட்டிக் கொள்வது போல் அமர்ந்தான்.

"வீட்டுக்கு வந்திருந்தியாம். இமீடியட்டா வரச் சொன்னதாச் சொன்னியாம்."

"அ...அ...ஆமாம்.... என்ன சார் சாப்பிடறீங்க?"

கணவனும் மனைவியும் உபசாரத்திலேயே ஆளை அடித்து வீழ்த்தி விடுவார்கள்.

"ஒண்ணும் வேணாம்."

"சகுந்தலா" என்று பின்னே திரும்பிக் குரல் கொடுத்தான்.

"இதோ வந்துட்டேன், கூல்ட்ரிங்ஸ் கலக்கிட்டிருக்கேன்."

அழகான ட்ரேயில் இரண்டு உயரமான கிளாஸ்களில் 'மாங்கோ ஜூஸ்' எடுத்து வந்தாள் சகுந்தலா.

அதற்குள் முரஹரியே எழுந்து ஒரு கிளாஸை எடுத்து அவனிடம் பவ்யமாக நீட்டினான்.

"என்ன விஷயம் முரஹரி?"

கேட்டறியுங்கள் உங்கள் புதிய

ஜாதகபலன் ஜோதிட போனின்

இந்த வாரபலன்கள்

0011 222 222 0+

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 31 | 32 | 33 | 34 | 35 | 36 |
| மேஷம் | ரிஷபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி |
| 37 | 38 | 39 | 40 | 41 | 42 |
| துலாம் | விருச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் |

சுவாமி யோகாநந்த் போன்

வேலைவாய்ப்பு?
உறவுகள்?
மகப் பேறு?
சட்டப் பிரச்சனை?

001 122 221 1727

பொருத்தம்

0011 222 222 043

பட்சி சாஸ்திரம்

0011 222 222 025

இது சர்வதேச போன் கால். அங்கீகரிக்கப்பட்ட கட்டணங்கள், எம் & ஏ. யு.எஸ்.ஏ.

mpbf

மெட்ராஸ் பெரியமேட் பெனிபிட் பண்ட் லிட்.,
மாருதி காம்ப்ளெக்ஸ், நெ. 90, சூளை நெடுஞ்சாலை,
சென்னை - 112. Ph.: 5321048 Regd.No.18-20964

**வைப்பு நிதிகள் : (FIXED DEPOSITS)**

ஓய்வுற்றோர்க்கள், விதவைகள், ஊனமுற்றோர்கள், முன்னாள் இராணுவத்தினர்கள், அறக்கட்டளைகள், மற்றும் 50 வயது மேற்பட்டவர்களுக்கு ரூ 10,000/- ம் அதற்கு மேலும் டெப்பாஸிட் செய்பவர்களுக்கு ஒரு வருடத்திற்கு 20%+ 1* % சிறப்பு வட்டி வழங்கப்படும். (*இத் திட்டத்தில் முதிர்வு காலத்தில் தொகையுடன் சேர்த்து வழங்கப்படும்.)

| காலவரை | 3 மாதங்கள் | 6 மாதங்கள் | 1 வருடம் | 2 வருடம் | 3 வருடங்கள் அதற்கு மேலும் |
|---|---|---|---|---|---|
| வட்டிவிகிதம் | 14% | 15% | 18% | 19% | 20% |

**நூதன வைப்புத்தொகை திட்டம் :**

உயர்தரகல்வி / திருமணம் ஆகியவற்றிக்கு ரூ 500/- முதலீட்டில்
132 மாதங்கள் (11 வருடங்கள்) கழித்து Rs. 5,000/-
252 மாதங்கள் (21 வருடங்கள்) கழித்து Rs. 40,000/- பெறலாம்.
ரூ 7,500/- முதலீட்டில் 15 வருடங்கள் கழித்து ரூ 1,26,000/- பெறலாம்.

**நகைகடன்**

1 சவரன் தங்க நகையின் மீது ரூ 2,400/- வரை 22.5% ஆண்டு வட்டியுடன் வழங்கப்படும். பரிமாற்றங்கள் பங்குதாரர்களுக்கு மட்டும்

M. முகுந்தன்
நிர்வாக தலைவர்

Komala Ads

# உங்கள் குழந்தைகள் π யின் மதிப்பைக் கற்கும் முன் ஒவ்வொரு பைசாவின் மதிப்பையும் கற்றுக்கொள்ளட்டும்.



பள்ளிக்கூடம் துவங்கவிருக்கிறது. உங்கள் குழந்தைகள், π = 3.142..., காக்கைக் குருவி எங்கள் ஜாதி, போன்ற புதிய பாடங்களை கற்றுக் கொள்ள, அடுத்த வகுப்புக்கு உயரவிருக்கிறார்கள். ஆனால், உங்கள் குழந்தைகளுக்கு ஒவ்வொரு பைசாவின் மதிப்பும் தெரியுமா?

உங்கள் குழந்தைகள் பெயரில் ஒரு "மணி பேக் டிபாஸிட்" துவக்குங்கள். துகர் அவர்களுக்கு, ஒவ்வொரு பைசாவின் மதிப்பைப் பற்றிய மிகச் சிறந்த பாடத்தை கற்றுக்கொடுக்கும். உங்கள் குழந்தைகள் துகருக்கு வந்து ஒவ்வொரு பைசாவின் மதிப்பையும் அவர்கள் பைகளில் நிரப்பிச் செல்லட்டும்.

**DUGAR**




• Chairman *Dr. C. Anna Rao* • Managing Director *Shri N. Tarachand Dugar*

**DUGAR FINANCE INDIA LTD**

HIRE PURCHASE ⊃ LEASING ⊃ PROPERTY DEVELOPMENT ⊃ PUBLIC DEPOSITS ⊃ MERCHANT BANKING ⊃ FOREIGN EXCHANGE ⊃ SHARE POINT

REGD. OFFICE: DUGAR TOWERS, 123 MARSHALLS ROAD, MADRAS 600 008. ☎ 8283535 (10 LINES) FAX: 8281122

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ADYAR | ☎ 4917700 | JAYANAGAR | ☎ 641511 | ERNAKULAM | ☎ 368615 | SECUNDERABAD | ☎ 848006 |
| MOUNTROAD | ☎ 8521868 | MALLESWARAM | ☎ 365276 | GUDUR | ☎ 21800 | TIRUPATI | ☎ 21977 |
| T.NAGAR | ☎ 4341541 | BOMBAY | ☎ 2846233 | MADURAI | ☎ 36106 | TRICHY | ☎ 469852 |
| MYLAPORE | ☎ 4942258 | CALICUT | ☎ 62044 | NELLORE | ☎ 27576 | VISHAKAPATNAM | ☎ 546581 |
| BANGALORE | ☎ 5585599 | COIMBATORE | ☎ 231867 | SALEM | ☎ 418769 | VIJAYAWADA | ☎ 476512 |

Particulars required to be specified as per Non-Banking Financial Companies and Miscellaneous Non-Banking Companies (Advertisement) Rules, 1977.

By Order of the Board For
DUGAR FINANCE INDIA LIMITED
N. TARACHAND DUGAR, Managing Director

Madras

TAKE WING ATS 00 - TM - KA - 00

"முதல்லே ட்ரிங்ஸ் சாப்பிடுங்க சார்!"

இது வலை தான். நழுவமுடியாத வலை. ஆனால் விழுவதில்லை என்ற முடிவில் இருப்பவனை எந்த வலை என்ன செய்யும்?

கிளாஸிலிருந்த ஜூஸ் முடியும் வரை இருவரும் ஒன்றும் பேசவில்லை.

கிளாஸ் காலியானதும் சகுந்தலா வாங்கிக் கொண்டு சிரித்தாள்.

"நீங்க மட்டும்தான் வர்றீங்க! ஒரு நாளைக்கு அவங்களையும் நந்துவையும் அழைச்சுட்டு வரணும்."

வாய் உபசாரமல்ல என்று தோன்ற வைப்பது போல் அவள் கண்களும் உதடுகளும் குளிர்ச்சியாகச் சிரித்தன.

"கூட்டிட்டு வர்றனே" என்று பட்டும் படாமல் சொன்னான் சிவநேசன்.

கிளாஸ்களை எடுத்துக் கொண்டு அவள் நகர்ந்தாள்.

"சொல்லு முரஹரி."

"ஒண்ணுமில்லே... அந்த மாச்சம்பட்டு மர்டர் கேஸ்லே நீங்க ஆஜராகிறீங்களாமே!"

"ஆமா. அக்யூஸ்டு அவங்க அப்பா உயிரோட வந்து தம்பிக்கு புத்தி சுவாதீனமில்லாததாலே சொத்தை அண்ணனுக்கு அதாவது அக்யூஸ்டுக்கு எழுதி வச்சதா பத்திரத்தைக் காட்டினான். ஆறு மாசத்துக்கு முன்னாடி!"

முரஹரி அக்கறையோடு கேட்டான்.

"அப்ப புத்தி சுவாதீனம் இல்லாம இருந்தது வாஸ்தவம். இப்ப புத்தி சுவாதீனம் இருக்குன்னு தம்பி டாக்டர் சர்ட்டிபிகேட் வாங்கி இருக்கானாம். இப்போ உயில் செல்லுமான்னு கேட்டான். செல்லாது. நியாயப்படி அவனுக்கும் சொத்தில் பங்கு உண்டுன்னேன். அதை எப்படியாவது ஒடைச்சு தம்பிக்குச் சொத்து இல்லாம பண்ண முடியாதான்னு கேட்டான். தப்பான எடத்துக்கு வந்திருக்கேப்பா! என்னால் முடியாதுன்னேன்."

"அப்புறமா?"

"போயிட்டான். அப்பறந்தான் மொட்டைக் கிணறிலே தம்பியைத் தள்ளிக் கொலை பண்ணியிருக்கான்."

"நீங்க?"

"செத்துப் போன தம்பி சம்சாரமும் அவனுடைய அப்பாவும் எங்கிட்டே வந்தாங்க. இது கொலைன்னாங்க. நான் கேஸ் ஃபைல் பண்ணச் சொன்னேன்."

முரஹரி லேசாகச் சிரித்தான்.

"சிவா சார்! ஐ நோ யூ வில் வின் த கேஸ்."

"தாங்க்யூ!"

"அவசரப்படாதீங்க! இப்ப அக்யூஸ்டு


# மங்கையர் மலர்

ஜூன் '95 இதழில்...

- 'பல்' டாக்டர் என்றால் பல் மட்டும்தான் எடுப்பவரா?
  பல் மருத்துவத்தில் நவீன சிகிச்சைகள்
- அழகு? அழகு...!
  அழகுக் கலை அறுவை சிகிச்சை நிபுணரின் நவீன தகவல்கள்

இரண்டும் இணைந்த இணைப்புப் புத்தகம்



- சனிப்பெயர்ச்சிப் பலன்கள்
- வேலை கிடைக்கக் கூடிய கல்வி...!
  - பற்றிய விவரத் தொகுப்பு



"பிரூன் பினாகபாணியைச் சுற்றி எதுக்கு இவ்வளவு கூட்டம்?"
"தூக்கத்தில் காணும் கனவுகளுக்கெல்லாம் பலன் கரெக்ட்டா சொல்லுறாராம்!"

— எம். அசோக்ராஜா

பெயில்ல வந்திருக்கான்."

"கேள்விப்பட்டேன். நீ தான் 'பெய்ல்' கொடுத்தியாமே?"

"அஃப்கோர்ஸ்... ஒரு பொலிடிகல் பிரஷர்."

"ஐஸீ!"

அவனே தொடரட்டும் என்று சிவநேசன் நேரம் கொடுத்தான்.

"மாச்சம்பட்டு சண்முகம் பெரிய புள்ளி. நெறய பொலிடிகல் இன்ஃப்ளுயன்ஸ் உள்ளவன்."

"தெரியுமே."

"நீங்க தலையிட வேண்டாம்னு எனக்குத் தோணுது."

சிவநேசன் ஒன்றும் சொல்லாமல் அவனையே உற்றுப் பார்த்தான். அடுத்து ஹாலில் மாட்டிய தங்கள் சீனியர் போட்டோவைப் பார்த்தான்.

"இது நீ சொல்றதா, அவன் சொல்றதா?"

"ரெண்டும்னுதான் வச்சுக்கங்களேன். அவன் ஐம்பது வரை தரத் தயாரா இருக்கான். இங்கே செஷன்ஸ்லயே முடிஞ்சுட்டா தேவலை."

"இல்லேன்னா?"

"உங்களுக்குத் தெரியாததா சார்?"

ஹைகோர்ட்... சுப்ரீம் கோர்ட் என்று மாச்சம்பட்டு சண்முகம் போகக் கூடியவன். போவான். அவ்வளவு வீண் செலவு எதற்கு என்று சல்லிசாக முடித்துவிட முயல்கிறான். புரிந்தது.

"இதுக்கா வரச் சொன்னே?"

"இது மட்டும் இல்லே சார்! நம்ம சீனியருடைய ஃபிப்த் டெத் அனிவர்ஸரி வர்றதில்லையா... டவுன் கிளப்ல ஒரு நினைவுச் சொற்பொழிவு. நீங்க தலைமை தாங்கணும்."

"தலைமை தானே... தாங்கினாப் போச்சு!"

"ஓ தாங்க்யூ சார்!"

"இட்ஸ் ஓகே" அவன் எழ முயன்றான்.

"அப்ப சண்முகம் விஷயம்?"

சிவநேசன் நிமிர்ந்து சிந்துமாதவன் போட்டோவைப் பார்த்தான்.

"டோண்ட் பி க்ரீடி!"

அதுதான் அவர் அடிக்கடி சொல்வது.

"பேராசைக்கு இரையாகாதே! அதி உயரத்துக்கு அடுத்த ஸ்டேஜ் அதல பாதாளம்!"

ஆயிரக் கணக்கான விசிறிகள் அவருக்கு. கட்சிக்காரர்கள். அவர் புகழ் தெரிந்தவர்கள். ஊரார். வெளியூரில் கூட.

'ஏழைகளின் வக்கீல். உண்மையின் வக்கீல்...' ஐம்பது வருஷம் உழன்று பெற்ற பெயர் அது.

"சாரி முராஹரி!" என்று சிவநேசன் எழுந்தான்.

"என்னசார் எழுந்துட்டீங்க?"

"நம்ம கட்சிக்காரனுக்கு நாமே துரோகம் பண்றதாவது! நம்ம சீனியர் வெறும்ன மெமோரியல் இல்லே."

"புரியல..."

"அப்படி அவர நாம அநாதையா விட்டுரலாமா? ஒருத்தராவது அவர் வழியிலே நடக்க வேண்டாமா?" என்று ஒரு கையை உயர்த்தினான் சிவநேசன்.

அவன் விடைபெறுகிறான் என்று முராஹரிக்குப் புரிந்தது.

"சார்... மாச்சம்பட்டு சண்முகம் பயங்கரமானவன்."

"நாம அனுமதிச்சுக்கிட்டு இருக்கற வரைக்கும் தானே? சகுந்தலாகிட்டே சொல்லிடு" என்று வெளியே வந்தான்.

எந்த நல்ல புத்தியோ பாங்க் நோட்டுகள் விவகாரத்தை முராஹரியிடம் பிரஸ்தாபிக்க விட வில்லை!

மனசுக்குள் கடவுளுக்கு நன்றி சொன்னான்.

நாலடி எடுத்து வைத்ததும் முன்பு போல் வீட்டுக்குப் போகும் போது உதிக்கும் பயம் வரவில்லை. தைரியமாய் நடந்தான்.




# கட்டங்களில் 'கன்னி' காயின்கள்!

●● சரித்திர காலத்தில், மன்னர்கள், சதுரங்கத்தைத் தமது 'மன நலத்'திற்கேற்பப் பயன்படுத்தியிருக்கிறார்கள்!

அக்பர், சதுரங்கக் காய்களாக நிஜக் குதிரைகளையும், யானைகளையும் பயன்படுத்தினார். ஷாஜஹானோ 32 கன்னிப் பெண்களை அப்படிப் பயன்படுத்தினாராம். வெற்றி பெற்றவருக்குப் பரிசாக அந்தப் பெண்கள் அளிக்கப்படுவார்களாம்!

மொரொக்கோவைச் சேர்ந்த மூலே ஹாசன் என்ற ராஜா சிறைக் கைதிகளைக் காய்களாகப் பயன்படுத்துவார் வெட்டுப்பட்ட 'காயின்' தலையும் உடனே வெட்டப்படும்!


• ஃபிஷர்

●● சரித்திரத்திலிருந்து கொஞ்சம் சமீபத்துக்கு வந்தால் 1977ல் கோர்ச்னாய், பெட்ரோசியன் ஆகியோருக்கிடையே நடந்த போட்டியை மறக்க முடியாது. ஆட்டம் சுமாராகவே இருந்தது என்றாலும் வேறு விஷயங்களில் அவர்கள் போட்ட ஆட்டம் உலகையே கலகலக்க வைத்தது. எல்.கே.ஜி. குழந்தைகளைப் போல "விளையாடும்போது அவன் என் காலை அழுத்துகிறான்", "அவர் என்னை உதைக்கிறார்" என்றெல்லாம் இருவரும் புகார்களை ஒருவர் மீது ஒருவர் எழுப்ப, விளையாட்டு மேஜைக்குக் கீழே பெரிய தடுப்பு ஒன்றை எழுப்பினார்கள் அமைப்பாளர்கள்.


• ஸ்பாஸ்கி

●● 1927ல் நடைபெற்ற சம்பவமும் வேடிக்கையானது. ஆரன் நிம்ஜோவிச் மற்றும் மிலன் விட்மர் ஆகியோர் நியூயார்க் செஸ் பந்தயத்தில் கலந்து கொண்டனர். பாதி பந்தயத்தில் விட்மர் தம் சிகரெட்டைப் பற்ற வைக்க முயற்சி செய்ய, அவர் புகைக்கக் கூடாது என்று அமைப்பாளர்களிடம் முறையிட்டார் நிம்ஜோவிச். உடனே விட்மர் புகைப்பதை நிறுத்திவிட்டார். சில நிமிடங்கள் கழித்து மீண்டும் முறையீடு செய்தார் நிம்ஜோவிச். அமைப்பாளர்கள் ஆச்சரியப்பட்டனர்- "உங்கள் எதிரி இப்போது புகைக்கவில்லையே" என்று.

"அது தெரியும். ஆனால் புகைக்க விரும்புவது போல் முகபாவத்தை வைத்துக் கொண்டிருக்கிறாரே" என்ற கோபமான, சீரியஸான பதில் வந்தது!

●● 1972ல் நடைபெற்ற ஃபிஷர்-ஸ்பாஸ்கி இறுதிச் சுற்றை உலகமே ஆவலுடன் கவனித்துக் கொண்டிருந்தது. இதற்குக் காரணம் செஸ்ஸின் மீது கொண்ட ஈடுபாடு மட்டுமல்ல, அப்போதைய பெரும் போட்டி வல்லரசுகளான அமெரிக்கா மற்றும் ரஷ்யாவின் பிரதிநிதிகளாக அவர்கள் கருதப்பட்டதுதான். (இந்தியா-பாகிஸ்தான் கிரிக்கெட் போட்டிகளில் நமக்கு விளையாட்டு ஆர்வத்தோடு தேச பக்தியும் ஊற்றெடுக்குமே, அது போல!) அப்போது ரஷ்யத் தரப்பிலிருந்து ஒரு குற்றச்சாட்டு எழுந்தது. "ஸ்பாஸ்கி உட்காரவிருக்கும் நாற்காலியில் அமெரிக்கர்கள் ஒருவித விஷத்தைத் தடவியிருக்கிறார்கள். இந்த விஷம் ஸ்பாஸ்கியின் உடலுக்குள் சென்றால், ஸ்பாஸ்கியால் வழக்கம் போல் முழு கவனத்துடன் விளையாட முடியாமல் போகும்" என்று அவர்கள் கூற, பதறிப் போனார்கள் அமைப்பாளர்கள். உடனே விளையாட்டு வீரர்களின் இரண்டு நாற்காலிகளும் கடும் சோதனைக்கு உட்படுத்தப்பட்டன. ஒவ்வொரு நாற்காலியையும் சுமார் இருபது கோணங்களில் எக்ஸ்-ரே எடுத்தார்கள். பிறகு வேறு ஒரு குற்றச்சாட்டின் காரணமாக, விளையாட்டு மேடையின் மேல் வெளிச்சத்திற்காக அமைக்கப்பட்டிருந்த கண்ணாடிகளையெல்லாம் நீக்கி சோதித்தார்கள். அவற்றில் இரண்டு செத்த ஈக்கள் இருந்தது மட்டுமே கண்டு பிடிக்கப்பட்டது. இவ்வளவு கலாட்டாவுக்குப் பின் ஆட்டம் தொடர்ந்தது. இத்தனைக்கும் ஃபிஷரும், ஸ்பாஸ்கியும் தனிப்பட்ட முறையில் கூட நண்பர்கள்தான்!

- ஜி.எஸ்.எஸ்.

# மாண்புமிகு கயவன்

4

**பா**லுவும் சாலமனும் பிரபுவின் அறை முன்வாசலை அடைந்தபோது, உள்ளே பானு உட்கார்ந்திருப்பது தெரிந்தது. பாலுவை வெளியே நிற்கும்படி சொல்லிவிட்டு சாலமன் மட்டும் உள்ளே நுழைந்தான்.

"பானு, டாக்டர் பிரபுவைப் பார்க்கணுமே" என்றான் சாலமன்.

"இப்போது அவர் யாரிடமோ பேசிக் கொண்டிருக்கிறாரே. நீங்கள் வந்ததாய்ச் சொல்லி நேரம் கேட்டு தெரியப்படுத்தறேன்."

அவர்கள் பேசிக் கொண்டே இருக்கும் போதே பிரபுவும் மாலதியும் வெளியே வந்தனர். அங்கு சாலமன் நின்றிருப்பதை பிரபு பார்த்ததும் அவர் முகம் மாறியது.

"என்ன சாலமன், என்னிடம் ஏதாவது பேச வேண்டுமா?"

"ஆமாம் டாக்டர் பிரபு... அவசரமில்லை; நான் பிறகு வந்தால் நல்லதுன்னு நினைக்கிறேன்" என்றான் மாலதியை ஒரு மாதிரியாகப் பார்த்துவிட்டு.

பிரபு சில வினாடிகள் மௌனமானார். மாலதி மெல்ல நகரத் தொடங்கினாள்.

"நான் 'லாப்'பில் வந்து உங்களிடம் பிறகு பேசுகிறேன்." பிரபு தம் அவசரத்தை உணர்த்தினார்.

"சரி சார்" சாலமன் விடை கொடுப்பது போல் சொன்னான்.

பிரபுவும் மாலதியும் காரை நோக்கிச் சென்றார்கள். பிரபு ஒருமுறை திரும்பிப் பார்த்தபோது யாரும் தன்னைக் கவனிக்கவில்லை என்று தெரிந்தது. காரில் மாலதி உட்கார்ந்ததும் பிரபு காரைக் கிளப்பி கட்டடத்துக்கு வெளியே வலதுபுற சாலையில் ஓட்டினார். அந்தப் பகுதியைத் தாண்டி எங்கேயாவது போய் லஞ்சு சாப்பிட்டுக் கொண்டே மாலதியிடம் விவரம் பேச வேண்டும் என்ற துடிப்பில் அவர் வழக்கத்தைவிட கொஞ்சம் வேகமாகவே ஓட்டினார்.

**சா**லமன் பாலுவிடம் திரும்பி வந்தான். "அந்த மாலதியை காரில் ஏத்திக்கிட்டு ஐயா சவாரி போயிட்டார்டா."

"ஒருவேளை அவன் ரிசர்ச் நோட்புக் உள்ளேயே வைச்சுட்டுப் போயிருப்பானோ?"

"ஆமாம்... வழக்கமான கைப்பையை அவன் எடுத்துக்கிட்டுப் போகலையே!"

"அப்படின்னா நாம இப்பவே 'நோட்ஸ்' எடுத்துக்கிட்டு போய் ஜெராக்ஸ் செஞ்சிடலாமா?"

"வேண்டாம்... அவன் திடீர்னு வந்துட்டா ரொம்ப தகராறு ஆயிடும்... பானு வெளியே லஞ்சுக்குக் கிளம்பிக்கிட்டு இருக்கா. நாம் ஏதோ சாக்குப் போக்கு சொல்லி பிரபு அறைக்குள்ளே போயிடுவோம்... முடிஞ்சவரை படிப்போம்... யாராவது உள்ளே வந்தாலும் சமாளிக்கலாமே." சாலமன் முடித்தபோது பாலு அவனுடைய தோளில் தட்டினான்.

இருவரும் சில தாள்களுடன் மீண்டும் பானு இருந்த அறையில் நுழைந்தனர்.

பானு தன்னுடைய வண்ணக் கைப்பையை எடுத்துக் கொண்டு புறப்பட ஆரம்பித்தாள்.

"பானு, இந்தத் தாள்களை அவருடைய மேசையில் வைக்கச் சொன்னார். கொஞ்சம் நோட்ஸ் எழுதச் சொல்லிட்டுப் போனார்" என்றான் சாலமன்.

"அடடா! நான் இப்போ வெளியே போகணுமே."

"அதனால் என்ன பானு, நாங்களே அறையை பூட்டிடறோம்... உள்ளே மற்றதெல்லாம் பூட்டித்தானே இருக்கு" என்று பாலு சாதாரணமாகச் சொன்னான்.

"நான் பார்த்துட்டு வந்துடறேன்" என்று சொல்லிவிட்டு உள்ளே போன பானு, சில நிமிடங்களில் வெளியே வந்தாள். "சரி... நீங்க வேலையை முடிச்சிட்டு அவருடைய அறையைப் பூட்டி சாவியை இங்கே வைச்சிடுங்க" என்று ஓர் இடத்தைக் காட்டினாள்.

"ஓ.கே." என்றான் சாலமன்.

**அ**வள் பார்வையிலிருந்து மறையும்

வரை காத்திருந்துவிட்டு பாலு, சாலமன் இருவரும் பிரபுவின் அறைக்குள் நுழைந்தனர்.

பிரபுவின் மேசைமேல் அவருடைய கைப்பை இருந்தது! அதில் பருமனான அந்த குறிப்புப் புத்தகமும் இருந்தது!"

பாலுவும் சாலமனும் எம்பிக் குதிக்காத குறைதான்.

"பாலு கதவைச் சாத்திவிடு" என்றான் சாலமன்.

அட்டவணைகளும், பாலு-சாலமன் தயாரித்த 'பிரபரேஷன்' விவரங்களும் இருந்தன. அதிகமாக ஒன்றும் ஆராய்ச்சி பற்றி எழுதப்படவில்லை... பாலுவுக்கு ஆர்வம் குறைந்து ஓரிரு முறைகள் "ஹாூம்" என்று அலுத்துக் கொள்ளவும் செய்தான். 'இன்னும் அரை மணிக்குள்ளாவது வெளியே ஓட வேண்டும். இது ஆபத்தில் முடியக்கூடிய திருட்டுச் செயல்!'

சாலமன் கம்ப்யூட்டர் தாள்களை ஒன்று



சாலமன் குறிப்புப் புத்தகத்தைத் திறந்தபோது சில தாள்கள்- கம்ப்யூட்டர் பிரிண்ட் அவுட்டுடன் இருந்தவை - அவன் கவனத்தைக் கவர்ந்தன. அவற்றை எடுத்துக் கொண்டு, குறிப்புப் புத்தகத்தை பாலுவிடம் தந்தான்.

பாலு குறிப்புப் புத்தகத்தை ஒவ்வொரு பக்கமாகப் புரட்டினான். அதில் நிறைய

விடாமல் படிப்பதில் தன்னை மறந்து ஈடு பட்டிருந்தான். பிரபு சுருக்கமான, ஆனால் நல்ல குறிப்புகளை வைத்திருந்தார். 'மேலதயான்' என்கிற பூச்சிக் கொல்லி பற்றிய தற் போதைய ஆராய்ச்சித் திட்டங்கள் விவர மாக, படிப்

வாசன்

படியாக அவற்றில் இருந்தன. பாலுவும் சாலமனும் தேடிய விவரம் அவர்களுக்கு இவ்வளவு விரைவில் கிடைக்கும் என்று சாலமன் அன்று காலை நினைக்கக் கூட இல்லை.

"பாலு...பாலு...இங்கே பார்..." பாலு அந்தத் தாள்களை வாங்கினான்.

சில நிமிடங்களில் பாலு படித்து முடித்தான். சாலமனின் முகத்தைப் பார்த்தான்.

"சாலமன், நமக்குக் கிடைக்க வேண்டியது கிடைச்சாச்சு... இதை 'ஜெராக்ஸ்' எடுக்க முடிலேயேன்னுதான் வருத்தம்!"

"பாலு... இப்பநாம படிச்ச இந்த ஆராய்ச்சிக் குறிப்புகளிலேருந்து என்ன நிச்சமாகுது தெரியுமா?"

பாலு தொடர்ந்து பேசினான். 'மேலதயான்' என்கிற பூச்சிக் கொல்லியை எலிக்குக் குறிப்பிட்ட அளவிலே உணவில் கொடுக்குபோது சில மாற்றங்கள் ஏற்படுகின்றன. எலியின் எடை குறைகிறது. மில்லிகிராம் அளவில் கொடுக்கும்போது எலியின் வளர்ச்சியும் தடைபடுகிறது. குறிப்பாக, ஆண் எலிகள் பாதிக்கப்படும். அவைகளின் தைராய்டு சுரப்பியின் வேலை தடுக்கப்படுகிறது... சரிதானே" பாலு நிறுத்தினான்.

"ஆண் எலிகளின் உயிரணுக்கள் எண்ணிக்கையில் குறையலாம் என்பது முக்கிய விளைவு இல்லையா?"

"அதனால் என்ன? எலிப் பெருக்கம் குறையும்" என்று பெரிதாகச் சிரித்தான் பாலு.

சாலமனும் சிரித்துவிட்டு, "மேலதயான்' பூச்சிக் கொல்லிக்கு இப்படிப் பலவித எஃபக்ட் இருக்குன்னு எனக்கு இன்னிக்குத் தான் தெரியும்" என்றான்.

"இதைத்தான் பிரபு ரொம்பப் பெரிய விஷயம்னு சொல்லிக்கிட்டுத் திரியறானோ?" என்றான் பாலு அலட்சியமாக.

"இருக்காது... பிரபுவை நீ ரொம்ப சாதாரண விஞ்ஞானின்னு நினைத்துக் பேசறதை விட்டுடு..."

"சரி, சாலமன்... மணி ஒண்ணே முக்கால். நாம மரியாதையாய் வெளியே போயிடணும்" என்று பாலு துரிதப்படுத்தினான். சாலமன் தாள்களை குறிப்புப் புத்தகத்தில் முன்னிருந்தபடியே வைத்து விட்டு, புத்தகத்தைப் பையில் வைத்தான். இரண்டு பேரும் பிரபுவின் அறைக் கதவைத் திறந்து வெளியே வந்தபோது அங்கே நீலா உட்கார்ந்திருந்தாள்!

பாலு, சாலமன் இருவரும் திடுக்கிட்டனர். இவள் எங்கே இப்போது வந்தாள்? யாரோ வரப் போவதாய் பானு சொல்லிவிட்டுப் போனாளே. அது நிருபர் நீலாதானா?

"டாக்டர் பிரபுவை ஒரு பேட்டி எடுக்க வந்தேன்... நீங்களும் ஏதாவது இங்கே நடக்கிற ஆராய்ச்சிகள் பற்றிச் சொன்னால் இன்னும் நல்ல கட்டுரையா எழுத முடியும்" என்றாள் நீலா.

"டாக்டர் பிரபுவே எல்லாம் சொல்லிடுவாரே நாங்க வேறே எதுக்கு?" சாலமன் நழுவப் பார்த்தான்.

"நேற்றைய பாராட்டு விழாவில் உங்கள் இருவரைப் பற்றியும் டாக்டர் பிரபு புகழ்ந்து சொன்னாரே... ஆனால் நீங்கள் இவ்வளவு அடக்கமானவர்கள்னு எனக்குத் தெரியாதே... நிச்சயம் உங்கள் உதவி இல்லாமல் டாக்டர் பிரபு இந்த அளவு வெற்றிகரமான ஆராய்ச்சிகளைச் செய்ய முடியுமா என்ன?" அளவாக பாலுவுக்கும் சாலமனுக்கும் ஐஸ் வைத்தாள் நீலா.

"நீங்க சொல்றதும் ஒரு விதத்திலே சரிதான்... டாக்டர் பிரபு செய்த, செய்துவரும் ரிசர்ச் பிராஜக்ட்டிலே எங்களுக்கும் பெரிய பங்கு உண்டு..." என்று பாலு ஆரம்பித்தான்.

"இதுவரை எத்தனை 'ரிசர்ச் ஆர்ட்டிகிள்' நீங்க மூன்று பேரும் எழுதியிருக்கீங்க?" நீலா குறிப்பாகக் கேட்டாள்.

"ஏழு எழுதி அனுப்பி, அதிலே நாலு ஏற்கெனவே வெளியாயிடுச்சு... வெளிநாட்டு ஜர்னல்களில் மூன்றும், இந்தியாவில் ஒன்றும் வந்திருக்கு." சாலமன் விவரம் சொன்னான். அதற்குள் பாலு நீலாவின் அடுத்த சீட்டில் உட்கார்ந்திருந்தான். சாலமன் நின்று கொண்டே பேசினான்.

"உங்கள் ஆராய்ச்சி எல்லாம் பூச்சிக் கொல்லி மருந்துகள் பற்றினவையா?"

"தொண்ணூறு சதவீதம் அதுபோல்தான்" பாலு முகத்தை சீரியஸாக வைத்துக் கொண்டே சொன்னான்.

"இப்ப எந்த பிராஜக்ட்டிலே இருக்கீங்க? ஒரே நேரத்துலே மூணு, நாலு பிராஜக்ட்ஸ் டாக்டர் பிரபு செய்வார்னு நான் கேள்விப் பட்டேன்". நீலா அவசரமில்லாமல் குறிப்பெடுத்துக் கொண்டே கேட்டாள்.

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx



அது சுலபம்
ஓராயிரம் பாம்புகளுடன்
ஒரே கூண்டில் இருந்தானாம்.
விஷப் பாம்புகள் வெளியில்தானே அதிகம்?
— ஜி.எஸ்.எஸ்

"இப்ப நாங்க மூணு பிராஜக்ட்ஸ்லே ஈடு பட்டிருக்கோம்." சாலமன் சுருக்கமாகவே சொன்னான்.

"முக்கியமாக 'மேலதயான்' என்கிற பூச்சிக் கொல்லி பற்றின ரிசர்ச்தான் ரொம்ப மும்முரமாய் நடக்குது" என பாலு முடிக்கு முன், சாலமன் குறுக்கிட்டு, "அதைப் பற்றியெல்லாம் நீங்க நேரடியாக டாக்டர் பிரபுவிடம் கேட்கிறது நல்லது... இல்லையா பாலு?" என்றான்.

பாலுவுக்கு முகம் மாறியது. சட்டென்று எழுந்து புறப்பட்டான். "எங்களுக்கு வேலையை முடிக்கணும்... நாங்க சொன்ன 'இன்பர்மேஷன்' உபயோகமாக இருக்கும்னு நினைக்கிறேன்" என்று முடித்தான் சாலமன்.

அவர்கள் அறையைவிட்டு வெளியே வந்ததும் அங்கே போட்டோகிராபர் மூர்த்தி நின்றிருந்தான். அவன் காமிரா சகிதம் இருந்ததைப் பார்த்ததும் பாலுவுக்குக் கொஞ்சம் சபலம் தட்டியது. அதைத் தெரிந்து கொண்டவன் போல் மூர்த்தியும், "உங்க இரண்டு பேரையும் ஒரு போட்டோ எடுத்துக்கலாமா? செய்திக் கட்டுரை எழுதும் போது அதைச் சேர்த்துப் போட்டா நல்லா இருக்கும்" என்றான்.

பாலு, சாலமன் இருவரும் 'போஸ்' கொடுக்க, மூர்த்தி ஒன்றுக்கு இரண்டாகத் தட்டிக் கொண்டான்.

"ரொம்ப தேங்க்ஸ்... டாக்டர்ஸ்" என்று சொன்னதும் பாலு, சாலமன் இருவரும் தங்கள் ஆராய்ச்சி அறையை நோக்கி நடந்தார்கள்.

மூர்த்தி உள்ளே திரும்பியதும் நீலா, "மூர்த்தி அந்த இரண்டு பேரும் இவ்வளவு நேரம் டாக்டர் பிரபுவின் அறையிலே இருந்தாங்க தெரியுமா?" என்றாள்.

"நான் இங்கே உட்கார்ந்துகிட்டு இருந்த போது உள்ளே இருந்து குரல்கள் கேட்டன. இது 'இன்வெஸ்டிகேடிவ்' ரிப்போர்ட்டிங் இல்லையா?"

"அதனாலே ஒட்டுக் கேட்டியா?" என்று மூர்த்தி சிரித்தான்.

"ஆமாம்... கேட்டது நல்லதாப் போச்சு... பாலு உரத்த குரலிலே பேசினதெல்லாம் காதிலே விழுந்தது... சாலமன் சொன்னது அரை குறையாய் விழுந்தது... ஆனால் விவரம் புரிஞ்சிடுச்சு" என்றாள் நீலா.

இதற்குள் பானு லஞ்சிலிருந்து திரும்பி விட நீலா ஏற்கெனவே அங்கு மூர்த்தியுடன் காத்திருப்பதைப் பார்த்தாள்.

"நீங்கதான் ரிப்போர்ட்டர் நீலாவா?"



**"அந்த ஆள் மாதிரி ஒவ்வொரு செயலையும் குறித்த நேரத்தில் செய்ய யாராலும் முடியாதுன்னு எப்படி சொல்றே?"**

**"தினமும் ராத்திரி பன்னிரண்டு மணிக்கு எழுந்து காலண்டரில் தேதி கிழிச்சுட்டுப் படுத்துப்பார்னா பார்த்துக்கோயேன்!"**

**— வெ. ராஜாராமன்**

என்றவள், "டாக்டர் பிரபு வர்ற நேரம்தான்... அடடே அவருடைய அறைக் கதவு திறந்திருக்கிறதே" என்று பதற்றப்பட்டாள்.

"பாருங்க, பாலுவும் சாலமனும் கவனக் குறைவாக பூட்டாம போயிருக்காங்க" என்று பானு சொல்லிக் கொண்டே பிரபுவின் அறைக்குள் போனாள். அங்கு எல்லாம் இருக்க வேண்டிய நிலையில் இருக்கிறதா என்று பார்த்தாள். அப்போதுதான் மேசை மேல் இருந்த டாக்டர் பிரபுவின் கைப்பையும், பையுனுள் குறிப்புப் புத்தகமும் அவள் கண்ணில் பட்டது.

'ஐயையோ! ரிசர்ச் ரெக்கார்டை பிரபு மறந்து இங்கேயே வைச்சிட்டாரே... நானும் கேபினட்டில் அதை வைச்சுப் பூட்டலையே' என்று அவசரமாக அதை எடுத்து உள்ளே வைத்துப் பூட்டினாள். தன்னுடைய பொறுப்பில் தவறியதற்காகத் தன்னையே இட்டிக் கொண்டாள். அறைக்கதவைச் சாத்திக் கொண்டு வெளியே வந்தாள்.

நேரம் நகர்ந்து கொண்டேயிருந்தது. மூர்த்தி அரை பாக்கெட் சிகரெட்டுகளை ஊதியாயிற்று. நீலாவோ அங்கிருந்த 'பாப்புலர் சயின்ஸ்' போன்ற பத்திரிக்கைகளைப் புரட்டியாயிற்று. பிரபு வந்த பாடில்லை. மணி நாலரை.

"நாம புறப்படலாம் நீலா... இன்னொரு நாள்தான் இண்டர்வியூ" என்றான் மூர்த்தி. அவன் சொல்வதை ஆமோதிப்பதைப் போல நீலாவும் எழுந்து பானுவிடம் விடை பெற்றாள். இருவரும் கட்டடத்தை விட்டு வெளியே வந்தனர்.

அப்போது பிரபு வெளியே ஒரு பக்கமாய் காரை நிறுத்தியிருந்தது தெரிந்தது. மாலதியும் பிரபுவும் பேசிக் கொண்டிருந்தனர். மாலதி கைக்குட்டையால் கண்களைத் துடைத்துக் கொண்டிருந்தாள். இதைப் பார்த்த நீலாவும் மூர்த்தியும் பிரபுவின் பார்வையில் படாமல் நகர்ந்தனர்.

(தொடரும்)

# திருமூர்த்தி



ஆப்பிரிக்காவிலிருந்து மெனக்கெட்டு பிளேன் ஏறி, இங்கே சமாதானத்தின் பொருட்டு புறா பறக்கவிட வரும் தலைவரை ஒரு லோக்கல் லாரி டிரைவர், தீயவர்களிடமிருந்து காப்பாற்றுவது கிளைமேக்ஸ். கதையும் அதுதான். மிஞ்சிப் போனால் பதினைந்து நிமிஷம். மிச்ச நேரமெல்லாம் கொனாரக் கோவிலில் டான்ஸ் ஆடி, கேரள நீர்ப் பரப்புகளில் சண்டை போட்டு, இடைத் தேர்தல் என்பதாகவும் அதில் ஹீரோ நிற்பதாகவும் வில்லனாகப்பட்ட அமைச்சர் நூதன சதித் திட்டங்களில் அவரைச் சிக்க வைத்து, கடைசிவரை கதற விடுவதும்— இது பவித்ரன் படம்.

ஒரு சாதாரண லாரி டிரைவர் மக்கள் தலைவனாகி எலெக்ஷனில் நிற்பதாக வரும் காட்சியின் ட்யூரேஷன், ஒரு அப்ளிகேஷன் ஃபாரம் நிரப்புவதற்கு ஆகிற அளவு கூட இல்லை.

அவனைக் கொலைக் குற்றம் சாட்டி, கேஸ் இல்லாமல் லாக்-அப்பில் வைத்து உதைக்கிறார் ஆளுங்கட்சி அமைச்சர். இரண்டு பேர் மட்டும் வேலை பார்க்கும் ஒரு தினசரி(?) பத்திரிகையைத் தவிர நாட்டில் வேறு யாருக்கும் இந்த விவகாரம் தெரியாது...!

கிளைமேக்ஸ் நெருங்க, நெருங்க, எப்படியாவது விஜயகாந்தை வீறுகொள்ளச் செய்ய வேண்டிய கட்டாயம் வந்துவிடுகிறது இயக்குநருக்கு.

ஆகவே, அவர் அம்மா மனோரமாவைப் பட்டினி போட்டுக் கொன்று, எரித்து, சாம்பலை ஒரு தட்டில் கொண்டு போய், "இந்தா, பூசிக்கோ" என்கிறார் வில்லனமைச்சர். வக்கிர சிகாமணிகள்!

புதிதாக அறிமுகமாகியிருக்கும் ஹீரோயினைப் பற்றி ஒருசில வார்த்தைகள் சொல்லலாம். அசப்பில் மீனா மாதிரி இருக்கிறார். சிரிக்கிறார். அரை டிராயர் தவிர வேறெதுவும் போட மாட்டேனென்கிறார். இறக்குமதியின் பெயர் ரவளி.

பாராட்டலாமென்றால் நடனர் கிருஷ்ணாவைச் சொல்ல வேண்டும். புதுமுகம். அசாத்திய வேகம். கம்ப்யூட்டர் ஒத்துழைப்புடன் ஒரு பாடல் காட்சியில் விசில் பறக்க வைக்கிறார்.

நல்ல விஷயங்கள் ஏதும் சொல்லாவிட்டாலும் யாரை எப்படிக் கொல்வது, எப்படி 'அலிபை' கிரியேட் பண்ணுவது என்பதையெல்லாம் சார்ட் போட்டு இத்தனை விலாவாரியாக விளக்காதிருக்கலாம்.

இதுமாதிரி படங்களுக்கு 'U' சர்ட்டிபிகேட் தந்து ஊக்குவித்திருப்பவர்களுக்கு தடா செல்லுபடி ஆகுமா என்று யோசிக்கிற வேளையிலா அதைக் காலாவதியாகும்படி விடவேண்டும்!

— ஆர்.பி.ஆர்.

# நாராயணனுக்கு ஓரிடம்; நாச்சியாருக்கே சிறப்பிடம்!

மேதாவி முனிவருக்கு ஓர் ஆசை. அந்தத் திருமகளையே தமது மகளாகப் பெற வேண்டுமென்கிற ஆசை! அவரது ஆசையைப் பூர்த்தி செய்வதற்காகவே அந்தத் திருமகளும் ஒரு குழந்தையின் வடிவமெடுக்கிறாள். முனிவரின் பர்ணசாலைக்கு அருகிலுள்ள வஞ்சுள மரத்தடியில் ஓர் அனாதைக் குழந்தை போல் கிடக்கிறாள். பார்த்த முனிவர் எடுத்து வருகிறார். வஞ்சுள மரத்தடியில் கண்டெடுத்ததால், குழந்தைக்கு வஞ்சுளவல்லி என்று பெயரிட்டு வளர்க்கிறார். குழந்தையும் மங்கைப் பருவமடைகிறாள்.

இதற்கிடையில் திருமகள் இல்லாத தனிமை பெருமாளை வாட்டுகிறது. இதையுணர்ந்த கருடாழ்வார், மேதாவி முனிவரின் மகளாகத் திருமகள் வளர்ந்து வருவதைப் பெருமாளுக்குச் சொல்கிறார். உடனே பெருமாள், சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன், புருஷோத்தமன், வாசுதேவன் என்று ஐந்து உருவங்கள் தாங்கிப் பூலோகத்துக்கு வருகிறார்.

இந்த ஐவரையும் கண்ட முனிவரின் சீடர்கள், ஆசிரமத்திற்கு அழைத்துச் செல்கிறார்கள். உபசரிக்கிறார் முனிவர். ஐவரும் உணவு அருந்தி முடித்து விட்டுக் கையலம்பச் செல்கிறார்கள். அவர்களுக்குத் தண்ணீர் தரும்படி வஞ்சுளவல்லியிடம் கூறுகிறார் முனிவர். அந்த ஐவரில் வசுதேவன், தண்ணீர் கொண்டுவந்த தையலின் கரத்தைப் பற்றுகிறான். "அப்பா!" என்று அலறுகிறாள் வஞ்சுளவல்லி. ஓடி வந்து பார்த்த முனிவர், கடுங்கோபங் கொண்டு, வாசுதேவனைச் சபிக்க முற்படுகிறார்.

முனிவரின் கோபத்தையுணர்ந்த வசுதேவன், உடனடியாகச் சங்கு சக்கரமேந்திய தமது திருக்கோலத்தைக் காட்டுகிறான். வந்திருப்பவன் நாராயணனே என்பதையுணர்ந்த முனிவரும் தமது மகளான வஞ்சுளவல்லியை வசுதேவ வடிவங்கொண்ட அந்த நாராயணனுக்கே மணம் செய்விக்கிறார். இந்தத் திருமணக் கோலத்தில் ஸ்ரீநிவாசப் பெருமாள் காட்சிதரும் தலம் தான் திருநறையூர்.



• கல் கருடன்

தமது பெண்ணைக் கொடுப்பதற்குமுன், அந்த நாராயணனுக்கே மூன்று நிபந்தனைகள் போடுகிறார் முனிவர். ஒன்று: தமக்குப் பிறவாமையாகிய பேறு. இரண்டு: இத்தலத்தில் வாழும் எல்லா உயிர்களுக்குமே விண்ணகர வாழ்வு. மூன்று: தமது மகளான வஞ்சுள வல்லிக்கே இத்தலத்தில் முக்கியத்துவம் தரப்பட வேண்டும் என்பது. மூன்று நிபந்தனைகளையும் ஏற்றுக் கொண்டான் நாராயணன். அதனால்தான் திருநறையூர் என்கிற தலம், வஞ்சுளவல்லிக்கு முக்கியத்துவம் கொடுக்கிற வகையில்







"நம்ம தலைவர் மாதிரி கடமை உணர்ச்சி யார் கிட்டயும் கிடையாது."

"எப்படி சொல்றீங்க?"

"தினம் வாக்கிங் போறப்ப 'தனி நபர் பேரணி'ன்னு போர்டு புடிச்சுக்கிட்டுப் போறாரே."

-அம்பை தேவா



"திறப்பு விழாவில் என்ன கலாட்டா?"

"முன்னாள் அமைச்சரின் மனைவின்னு போடறதுக்கு பதிலா அமைச்சரின் முன்னாள் மனைவின்னு பத்திரிகைல போட்டுட்டாங்களாம்!"

— பழனி



"இடியாப்பம் பண்ணிக் கொடுக்காதேன்னு சொன்னா கேட்டியா...? கெட்டியா இருந்துச்சு... கயிறா யூஸ் பண்ணி பல கைதிகள் தப்பிச்சுப் போயிட்டாங்க...!"

–பியெஸ்பி

பம்பாய் மாநகராட்சிக்கு மேயர் தேர்தல் நடைபெற்றது. வெற்றி பெற்ற சஞ்சீவ் நாயக், சிவசேனை வேட்பாளர். நம் நாட்டின் மிக இளைய மேயர் இவர் தான். வயது 23.

சஞ்சீவ் நாயக் சிவசேனை எம்.எல்.ஏ. கணேஷ் நாயக்கின் மகன்!

–ஹிந்துவிலிருந்து வி. ஸ்ரீனிவாசன்

நாச்சியார் கோயில் என்று பெயர் வழங்கலாயிற்று. திருக்கோயிலுக்கு ஸ்ரீநிவாசப் பெருமாள் கோயில் என்கிற பெயரானாலும் அது நாச்சியார் கோயில் என்கிற தலத் துக்குள் அடங்கிப் போனது!

கும்பகோணத்திலிருந்து பத்து கி.மீ. தொலைவிலுள்ள இத்தலத்திற்கு இன்னொரு சிறப்பு கருடாழ்வார். இங்கு கருடாழ்வாருக்குத் தனி சந்நிதி. இவருக்கு இங்கே ஆறுகால பூஜை.

பங்குனி மற்றும் மார்கழி மாதங்களில் நடைபெறும் கருடசேவை மிகவும் விசேஷமானது. இங்கு மட்டுந்தான் மூலவராய் இருக்கிற கருடாழ்வாரே உற்சவமூர்த்தியாகவும் திருவீதியுலாப் புறப்படுகிறார். அதனால் இங்கு மட்டும்தான் கல்லாலான கருடவாகனமூர்த்தி. மற்ற தலங்களில் மரம், வெள்ளி போன்ற கருட வாகனங்கள்தாம் இருக்கும். கருவறையிலிருந்து நான்கு பேர் தூக்கிவரும் கருடாழ்வார் மெல்ல மெல்லக் கனக்க ஆரம்பிப்பதால், கருவறைக்கு வெளியே எட்டுப் பேர், பதினாறு பேர், 32 பேர் என்று தூக்கி வருகிறார்கள். கடைசியில் திருவீதியுலா முடிந்து கருவறைக்குப் போகும்போதும் படிப்படியாகக் கனம் குறைந்து கொண்டே வருவாராம். அதனால் ஆட்களின் எண்ணிக்கையும் குறைந்து, கடைசியில் கருடாழ்வாரைக் கருவறையில் வைக்கும்போது பழையபடி நான்குபேர்தான் கொண்டு செல்வார்கள்.

இத்தலத்தின் இன்னொரு சிறப்பு, திருமங்கையாழ்வாருக்கு அந்த ஸ்ரீநிவாசப் பெருமாளே முத்திராதாரணம் செய்து வைத்தார் என்பது. திருமங்கையாழ்வாருக்கும் இந்தப் பெருமானிடம் ஆறாத காதல். அதனால்தான்,

அம்பரமும் பெருநிலனும் திசைகள்
எட்டும்
அலைகடலும் குலவரையும் உண்ட
கண்டான்
கொம்பு அமரும் வடமரத்தின்
இலைமேல் பள்ளி
கூடினான் திருவடியே கூடகிற்பீர்.?
வம்புஅவிழும் செண்பகத்தின் வாசமுண்டு
மணிவண்டு வகுளத்தின் மலர்மேல்
வைகும்
செம்பியன் கோச் செங்கணான் சேர்ந்த
கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே!

என்று நம்மையெல்லாம் கூவியழைக்கிறார், திருமங்கையாழ்வார்.

- கமலமணராஜன்



"DRAMAS IN REAL LIFE TAKE PLACE WITHOUT REHEARSALS"

அவ்வப்பொழுது எனது கட்டுரைகளில் மேற்கோளாக உபயோகப்படுத்தப்படும் முதுமொழிகளைப் பாராட்டி நிறைய அன்பர்கள் கடிதம் எழுதுகிறார்கள்.

ஒரு அன்பர் மட்டும் எழுதியிருந்தார். "ஒரு குறிப்பிட்ட quotationஐ எடுத்துக் கொண்டு அதை நியாயப்படுத்தி விட வேண்டுமென்கிற கவலையில் சம்பவங்களைத் தேடிப் பிடித்து கட்டுரையை எழுதுகிறீர்களோவென்று தோன்றுகிறது" என்று சற்று குறைப்பட்டுக் கொண்ட மாதிரி எழுதியிருந்தார்.

முதுமொழி கருத்துக்கள் அனைத்தும் காலத்தினால் நியாயப்படுத்தப்பட்ட உண்மைகள். நான் நியாயப்படுத்த வேண்டிய அவசியம் இல்லை.

# நினைவலைகள் 44

A quotation at the right moment is like bread to the famished.

- THE TALMUD -

தக்க நேரத்திலே சொல்லப்படுகின்ற மேற்கோள்கள், திரையிலே நாங்கள் கையாளுகின்ற symbol-களைப் போல, ஒரு உத்தி. இன்னும் சொன்னால் மேடையிலே சொல்கின்ற குட்டிக் கதைகளைப் போல!

எனக்கு வயது ஒன்பது இருக்கலாம். எங்கள் ஊரில் ஒரு பொதுக் கூட்டம் ஏற்பாடாகியிருந்தது. மூதறிஞர் ராஜாஜி அவர்கள் அன்று ஒரு சொற்பொழிவை நிகழ்த்தினார். அவரைப் பார்ப்பதற்கும் அவருடைய கருத்துக்களைக் கேட்பதற்கும் கூடியிருந்த திரளான மக்கள் கூட்டத்தின் மத்தியிலே நானும் நின்று கொண்டிருந்தேன். "உங்கள் வோட்டு மஞ்சள் பெட்டிக்கே" என்று சுவருக்குச் சுவர் ஒட்டப்பட்டிருந்த சுவரொட்டிகள். ராஜாஜி அவர்கள் பேசினார்கள். மக்கள் பேச்சுக்குப் பேச்சு கைதட்டினார்கள்.

ஆரவாரம் எழுப்பினார்கள். ராஜாஜி அவர்களின் சின்னச் சின்ன வார்த்தைகள்; சின்னச் சின்ன வரிகள்! தமக்கே உரிய பாணியில் ஒரு குட்டிக் கதை சொன்னார். எந்த அரசியல் சூழ்நிலைக்கு உவமையாக அந்த குட்டிக் கதையைக் கூறினார்கள் என்பது எனக்கு நினைவில்லை; அரசியலைப் புரிந்து கொள்ளும் வயதும் அன்று எனக்கு இல்லை.

ஆனாலும் அவர் பேசிய பாணி பசுமரத்தாணியாக என் மனதிலே பதிந்தது. சின்னச் சின்ன வார்த்தைகளால் தகுந்த உவமைகளோடு சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் பாணி அது.

கூட்டம் முடிந்தது. நான் வீடு திரும்பினேன். ராஜாஜி அவர்கள் மீது மிகப் பெரிய மரியாதையும் பக்தியும் ஏற்பட்டிருந்தது. ஆனால் வீட்டிற்கு வந்த போது, ராஜாஜி சொன்ன சில கருத்துக்களை ஒப்புக் கொள்ள முடியாமல் தீவிரமாக தமது எதிர்ப்புக்களைத் தெரிவித்தபடி எனது தந்தை வீட்டினுள் உரக்கக் கத்திக் கொண்டிருந்தார். எந்தக் கருத்தை அவர் எதிர்த்துப் பேசிக் கொண்டிருந்தார் என்பதும் எனக்கு சரியாக நினைவில்லை.

"காங்கிரஸ்காரன் கையிலே சுயராஜ்யம் கொடுக்கலாமா" என்று தொனிக்கிற ஒரு கருத்தைத்தான் எனது தந்தை சொல்லிக்

**கே. பாலசந்தர்**

# பிரிந்தவர்களைக் கண்டுபிடிங்க!

**பி**ரிந்தவர் கூடுவதும் கூடி இருந்தவர் பிரிவதும் நம் நாட்டு அரசியலில் ரொம்ப சாதாரணம். இங்கே தரப்பட்டுள்ள குறிப்புகளைக் கொண்டு 'பிரிந்தவர்'களைக் கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்! முடியாதவர்கள் 58 - ம் பக்கத்தைப் பார்க்கலாம்.

1. சக்கரம் நிற்கிறது ☐☐☐☐

2. இரு தலை ராகம் ☐☐☐☐☐☐

3. 'சிம்ம'த்துக்குச் சொப்பனம்! ☐☐☐☐☐☐

4. அப்பர் பெருமான் அல்ல ☐☐☐☐☐☐☐☐

5. படகோட்டி ☐☐☐☐☐☐

---

கொண்டிருந்தார் என்பது மட்டும் மேலோட்டமாக எனக்கு நினைவு வருகிறது.

எனது தந்தையின் கடைசி காலம் வரையிலும் அவருடைய கொள்கை இதுவாகத்தான் இருந்தது : "We are unfit to govern ourselves."

ராஜாஜி அவர்களைக் கடுமையாக விமர்சித்துக் கொண்டிருந்த எனது தந்தையைப் பார்த்து எனக்குக் கோபம் கோபமாக வந்தது. இன்றைக்கு என் தந்தை உயிருடனிருந்தால் "அன்றைக்கு நான் சொன்னதையேதான் இந்த 48 ஆண்டுகளும் நிருபித்துக் கொண்டிருக்கின்றன" என்று சொல்வாரோ என்னவோ?

**1952**-ம் ஆண்டு என்று நினைக்கிறேன். ஒரு பெரிய அமெச்சூர் நாடகக் குழுவின் நாடகம் நடந்து கொண்டிருந்தது. ஒரு புராண நாடகம் என்று நினைவு.

ராஜாஜி அவர்கள் நாடகத்திற்குத் தலைமைதாங்கி நடிகர்களைப் பாராட்டுவார் என்று விளம்பரப்படுத்தப்பட்டிருந்தது. ராஜாஜி அவர்களின் பேச்சைக் கேட்கலாமே என்றுதான் அன்று நாடகத்திற்கு நானும் சென்றிருந்தேன்.

ராஜாஜி அவர்கள் மேடைக்கு வந்தார்; தலைமை உரை நிகழ்த்தினார்.

"நடிகர்கள் அத்தனை பேரும் கஷ்டப்பட்டு நடித்தார்கள்; நீங்களும் கஷ்டப்பட்டுப் பார்த்தீர்கள்."

மெல்லிய சன்னமான குரலில்தான் சொன்னார். கரவொலியினால் நாடகக் கொட்டகை அப்படியே அதிர்ந்தது.

**எ**னது "மேஜர் சந்திரகாந்த்" நாடகம் நாடக மேடைகளிலே ஒரு பெரும் புயலைக் கிளப்பிக் கொண்டிருந்த நேரம். 1963. பல்வேறு கட்சித் தலைவர்களும், பிரபல இலக்கியவாதிகளும் அந்த நாடகத்தைப் பார்த்து விட்டார்கள். அந்த நாடகத்தை ராஜாஜி அவர்கள் பார்க்க மாட்டாரா என்கிற ஏக்கம் எனக்கிருந்தது. தமிழ் நாடகங்களை அதிகம் பார்க்காத ராஜாஜி அந்த நாடகத்தின் வெள்ளி விழா காட்சியின் போது கலந்து கொள்ளவிருக்கிறார் என்கிற செய்தி தனிப்பட்ட முறையில் எனக்கு மிகப் பெரிய மகிழ்ச்சியையும், எங்கள் குழுவினருக்கு ஒரு உத்வேகத்தையும் அளித்தது.

அந்த நாளை மிக ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். அந்த நாள் வந்தது; ராஜாஜி அவர்கள் வந்தார்கள்; பார்த்தார்கள்; மேடையிலே பாராட்டிப் பேசினார்கள். அவர்கள் கடுமையாக எதையுமே விமர்சிக்கவில்லையென்பதே அந்த நாடகத்திற்குக் கிடைத்த மிகப் பெரிய பாராட்டாக நாங்கள் நினைத்தோம்.

"நல்ல நாடகம்; ரசிப்பதற்கு நம்மை சிரமப்படுத்தாத நாடகம்; நடிகர்கள் நன்றாக நடித்தார்கள். ஆனால் ஒன்றை மட்டும் நான் இங்கே சொல்ல வேண்டும். தனது சகோதரியைக் கைவிட்ட ஒருவனை, அவனுடைய அண்ணன் கொலை செய்வதாக இதில் வருகிறது. இது வாழ்க்கையில் நடக்கலாம். Dramas in real life take place without rehearsals. ஆனால் நிறைய ஒத்திகைகளோடு நீங்கள் நடிக்கின்ற நாடகங்களில் அநீதி இழைக்கப்

பட்டவன், தானே சட்டத்தைத் தன் கையில் எடுத்துக் கொள்வது மட்டும் என்னால் ஒப்புக் கொள்ள முடியாத ஒரு விஷயம்."

நேற்றுத்தான் அவர் சொன்னது போல் என் காதுகளில் ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கிறது.

மேடையை விட்டு அவர் இறங்கும் போது, ஓர் ஓரமாக மேடையில் கைகளைக் கட்டிக் கொண்டு நின்று கொண்டிருந்த என்னை இழுத்து ராஜாஜி அவர்களின் முன் நிறுத்தி இந்த நாடகத்தை எழுதி டைரக்ட் பண்ணியது இந்தப் பையன்தான் என்று அறிமுகப்படுத்தினார்கள். ராஜாஜி அவர்கள் ஒரு புன்சிரிப்புடன் எனது முதுகில் தடவிக் கொடுத்த அந்த இனிய ஸ்பரிசம், எனது இரத்த நாளங்களில் இரண்டறக் கலந்து விட்ட ஒரு thrilling அனுபவம்.

ஒரு திரைப்பட இயக்குனராக ஆன பின் எனக்கு ஒரு பேராசை இருந்தது. என்னால் இயக்கப்பட்ட திரைப்படம் ஏதாவது ஒன்றை ராஜாஜி அவர்களைப் பார்க்க வைக்க வேண்டும் என்பதுதான். இது ஒரு தீராத ஆசையாக இருந்தது.

ஏ.வி.எம். அவர்கள் தமிழாக்கம் செய்து வெளியிட்ட 'ராமராஜ்யா' என்கிற ஒரே ஒரு திரைப்படத்தை மட்டும் ராஜாஜி அவர்கள் பார்த்திருப்பதாக நான் கேள்விப்பட்டிருக்கிறேன். மற்றபடி திரைப்படங்களையே பார்க்காத, பார்க்க விரும்பாத அன்னாருக்கு, எனது ஒவ்வொரு படம் வெளிவந்த போதும், அவருக்குப் போட்டுக் காட்டக்கூடிய தகுதி இந்தப் பட்த்திற்கு இருக்கிறதா என்று நினைத்துப் பார்ப்பேன். 'வேண்டாம்' என்று நானே முடிவு செய்து கொள்வேன்.

அந்த நேரத்திலேதான் காந்தியக் கொள்கைகளையும், கோட்பாடுகளையும் அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்ட எனது 'புன்னகை' திரைப்படம் வெளிவந்து விமர்சகர்களாலும் மேல் மட்டத்து ரசிகர்களாலும் பெருமளவில் பாராட்டுப் பெற்றது. இந்தப் படத்தை அவருக்கு எப்படியாவது போட்டுக் காட்டி விட வேண்டும்; அவருடைய பாராட்டுக்களைப் பெற்று விட வேண்டுமென்றும் முடிவு செய்து கொண்டேன். ஆனால் அன்றைக்கு அவரை நெருங்கவே முடியாத ஏதோ சூழ்நிலைகள்... அரசியல் காரணங்களோ அல்லது உடல்நிலை காரணங்களோ சரியாக நினைவில்லை.

**எம்.** விசுவேஸ்வரய்யா அவர்கள் சொன்னார்கள் : "The way to build a better nation is to build better individuals." இதைத்தான் 'புன்னகை' திரைப்படம் கோடிட்டுக் காட்டியது.

இன்று வரை எனக்கு ஒரு மனக்குறை தான், ராஜாஜி அவர்கள் இந்தப் படத்தைப் பார்க்கவில்லையே என்று. உண்மையே பேச வேண்டுமென்கிற கோட்பாட்டைக் கடைசி வரை கடைப்பிடித்த 'புன்னகை' கதாநாயகனை ராஜாஜி அவர்கள் நிச்சயம் ரசித்திருப்பார்கள்.

"People laugh at what is unusual. And truth has now become so unusual that we laugh at truth when we meet it."

ராஜாஜி அவர்கள் சொன்னதுதான்.

(தொடரும்)

GOKULAM
The monthly magazine for children
GOKULAM, 47 Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Madras - 600 097.
Hey! Look what I've got!
It's the latest GOKULAM!
Give it to me! I want to read it first!
Crazy! What's in that book!
JUNE '95 ISSUE!
PACKED WITH EXCITEMENT! RUSH FOR YOUR COPY!
96 PAGES FOR JUST Rs. 5!

# பூங்கா மனிதர்கள்!

டாக்டர் நடேசன் பூங்கா:

கையில் டென்னிஸ் ராக்கெட்டும், முகத்தில் களைப்பு ப்ளஸ் பெருமையுமாக வந்து கொண்டிருந்தான் சிறுவன் கார்த்திக். கூடவே அவன் அம்மா லதா குமரேசன்.

"எம்.எம்.ஸி. நடத்தும் டென்னிஸ் வகுப்புகளில் இவனை சேர்த்திருக்கிறோம். பயிற்சி இந்தப் பூங்காவிலேதான். வாரம் நாலு நாட்கள் நடக்குது. சாயந்திரம் மூணரையிலிருந்து நாலரை வரை க்ளாஸ். என் கணவரோ, நானோ வந்து அழைத்துக் கொண்டு போவோம்" என்றார்.

டென்னிஸ் பயிற்சியின் நோக்கம்? வருங்காலத்தில் ஸ்போர்ட்ஸ் கோட்டாவில் வேலை? ஃபிட்னெஸ்? விம்பிள்டன்?

"உடற்பயிற்சிக்காக" என்ற லதா இன்சூரன்ஸ் நிறுவனமொன்றில் பணி புரிகிறார்.

"தினமும் விடியற்காலையிலே சுமார் ஐந்நூறு பேர் வருவாங்க" என்று தொடங்கினார் மாணிக்கம் - டாக்டர் நடேசன் பூங்காவின் காவல்காரர். ஏன் இந்த முற்றுகை? "உடற்பயிற்சிக்காக வராங்க. இப்பக் கூட பாருங்க, பத்துப் பதினைஞ்சு பேர் வேகமா நடந்துக்கிட்டிருக்கறதை..." என்று சுட்டிக் காட்டினார்.

"ஏழரை மணிக்குப் பூங்காவை மூடிடுவோம். அதுக்குப் பிறகு இரவு முழுக்க காவல் உண்டு. எந்தத் தப்பு தண்டாவும் இப்ப இங்கே நடக்கறதில்லே"

**"எங்கே இந்தப் பக்கம்?" என்று பூங்காவுக்கு வருபவர்களைக் கேட்டால் விசிட்டுக்கு விதவிதமான காரணங்கள் சொல்கிறார்கள்...**

பனகல் பார்க் :

பகைமையும் இல்லாமல் கலகலவென்ற கூட்டமும் இல்லாமல் அமுது வடிந்து கொண்டிருந்தது.

நம் கண்களில் பட்டது சற்றே வயதான, ஆனால் உற்சாகமான ஒரு ஜோடி.



• படிப்பதற்கு ஜோதி

"அழகப்பா பல்கலைக்கழகத்தில் ஆர்டிஸ்டாக வேலை செய்து சமீபத்தில் தான் ரிடையரானேன். இவ காரைக்குடியிலே டீச்சரா வேலை செய்துக்கிட்டிருந்தா. வாலண்டரி ரிட்டையர்மெண்ட் வாங்கிக்கிட்டு வந்துட்டா."

"சென்னையிலேயே மகன் வீடு தி. நகரிலேதான். ஆனாலும் இதுவரை இந்தப் பூங்காவுக்கு வந்ததே இல்லை. அதுதான் இன்னக்கிக் காய்கறி வாங்கக் கிளம்பும் போது, முதலிலே இங்கே நுழையலாமேன்னு சொன்னேன்."

"எங்கேங்க நேரம் கிடைக்குது? ஆபீஸ் காரியம், மகன் கல்யாணத்துக்கான அலைச்சல்னு நேரம் சரியா இருந்தது. இப்போதான் இந்த மாதிரி பூங்காவுக்கெல்லாம் போக நேரம் கிடைச்சிருக்கு."

தியாகராஜன் - ராஜம்மாள் தம்பதி அடுக்கிக் கொண்டே போனார்கள்.

**சுதந்திர தினப் பூங்கா :**

**நு**ங்கம்பாக்கத்தில் இங்கே தீவிரமாக எதையோ படித்துக் கொண்டிருந்த ஒருவரை நெருங்கி நம் வினாவைத் தொடுக்கவும், உடனே சற்றுத் தள்ளிப் படித்துக் கொண்டிருந்த தம் நண்பர்கள் திபேஷ், மணிகண்டன் ஆகியோரையும் அழைத்துக் கொண்டார் சத்யஜீவன். கோரஸாக அவர்கள் தந்த பதில் இதோ :

"இந்தி பிரசார் சபாவிலே பிஎட். (இந்தி) படிக்கிறோம். கேரளாவிலும் இந்தப் படிப்பு இருக்கு. ஆனால் நிறைய ஃபீஸ் கட்டணும். இங்கே அப்படி இல்லே. ஒன்பது மாத கோர்ஸ் இது. அடுத்த மாதம் தேர்வு எழுதணும். நாங்க தங்கியிருக்கிற லாட்ஜ் அறை ரொம்பக் குறுகலானது. அதை விட, இங்கே வந்து படித்தால் மூளைக்குள் கொஞ்சம் அதிகமாகப் பாடங்கள் ஏறுது."



• ரிடையராகி நிம்மதியாய்....



• கடலைப் பார்த்து அலுத்து....



• டென்னிஸ்ஸில் மகனை ஈடுபடுத்தி....

**நாகேஸ்வரராவ் பார்க்:**

**ஞா**யிறு மாலை டீ.வி. சினிமாவைப் புறங்கையால் தள்ளி விட்டு வந்திருந்தார்கள் மக்கள்.

ஸ்ரீதரன் முரளி என்று தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டவர், தம் மனைவி துர்காவையும் அறிமுகப் படுத்தினார்.



• "தப்புத் தண்டா கிடையாது..."

"இங்கே மாமியார் வீட்டுக்கு வந்திருக்கேன். மெரைன் இன்ஜினியராக வேலை செய்கிறேன். தினமும் கடலைப் பார்த்துப் பார்த்து அலுத்துடுச்சு. அதனாலே இன்னிக்கு இந்தப் பூங்காவுக்கு! பசுமையைப் பார்த்தாலே மனசு நிறைஞ்சிடுது. பசுமையிலேயே கூட எவ்வளவு வெரைட்டி தெரியுது பாருங்க" என்றார்.

பசுமையை நாடி வரும் மனிதர்களிடையே கூடத்தான் என்று நினைத்துக் கொண்டோம்.

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : காமெரா திருஞானம்



# பாலம்

●● ரசிகமணி டி.கே.சி. "பொன்மாரி பெய்யும் ஊர்" என்ற கவிதைக்கு விளக்கம் தந்து எழுதிய கட்டுரை, திரு நவீனனை ஆசிரியராகக் கொண்ட நவயுவன் மாத இதழில் வெளிவந்தது. அந்தக் கட்டுரையின் ஜெராக்ஸ் நகல் கிடைத்தால் உதவியாக இருக்கும்.

- தீப. நடராஜன்,
"பஞ்சவடி"
2, அனுமந்தபுரம் தெரு,
தென்காசி - 627 811.

●● சுயவேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் கடன் பெற்று லாபம் தரும் தொழில்கள் தொடங்கவும் உற்பத்தியானவற்றை விற்கவும் உதவுகிறோம்.

- உதவும் நண்பன்,
9/106, தெற்குத் தெரு,
ஏர்வாடி - 623 515.

●● ரிக், யஜுர், சாம வேதங்களின் மொழிபெயர்ப்பு காசிவாசி சிவானந்த யதீந்திர சுவாமிகள் இயற்றி, சென்னை தப. இராமசாமி பிள்ளையால் 1935ல் வெளியிடப்பட்டது. சாமவேதம் உள்ளது. மற்ற இரண்டும் விலைக்குத் தேவை.

- எஸ். ராமதாஸ்,
எண் 35, பிளாட் 101,
மாதவன் சாலை,
கே. கே. நகர்,
திருச்சி - 620 021.

●● வால்வு ரேடியோவுக்கு தேவையான வால்வுகள் மற்றும் டிரான்ஸ்ஃபார்மர்கள் உள்ளன. தேவைக்கு எழுதவும்.

- கே. இராமன்,
மரத்துறை (அஞ்சல்),
திருமேனியார்
கோயில் (வழி)
609 204.

●● அண்ணாமலை பல்கலைக்கழகம் அஞ்சல் வழி கல்வி எம்.ஏ. மனஇயல் (pshychology) பாடப் புத்தகங்கள் தேவை. விலைக்கோ இரவலாகவோ அளித்து உதவவும்.

- ஏ. மாலிக் பாஷா,
139 ஏ, மெயின்
ரோடு,
துக்காபேட்டை
அஞ்சல்,
செங்கம் - 606 709.

●● அலுவலக கடித உறைகள் செய்யும் வெட்டுக் கருவி (cover cutting machine) தேவை. விலை மற்றும் இதர தகவல்கள் அனுப்பிட வேண்டுகிறேன்.

- எம். ஜீவா,
16, மேற்கு மடவளாகம்,
திருவையாறு,
613 204.

●● தியாகராஜ கீர்த்தனைகள், புரந்தரதாசர் கிருதிகள், பாபநாசம் சிவன் பாடல்கள் அடங்கிய நூல்கள் தேவை. விருப்பமுள்ளோர் அனுப்பினால் நன்றியுடன் பெற்றுக் கொள்கிறேன்.

- வி. சோமசுந்தரம்,
SJQ 114, G.K. காலனி,
நெய்வேலி - 607 802.

●● வீட்டிலிருந்தபடியே பெண்கள் சொட்டு நீலம், ஊதுபத்தி, அப்பளம், ஊறுகாய், பினாயில் தொழில் தொடங்கி வருமானம் பெற எழுதவும்.

- ஜி. ஆர். மோஹன்,
25, வள்ளுவர் தெரு,
வெங்கமேடு,
கரூர் - 639 006.

●● சுஜாதாவின் பேட்டியுடன் வெளிவந்த "தமிழ் கம்ப்யூட்டர்" மாத இதழின் முதல் பிரதி (நவம்பர் - 1994) அவசியம் தேவை. விலை தந்து பெற்றுக் கொள்கிறேன்.

- க. தணிகைநாதன்,
கற்பக விநாயகர்
கோயில் தெரு,
குறிஞ்சி நகர்,
பாண்டிச்சேரி -
605 008.

●● எமது மனநலகாப்பக வருமானத்துக்கு உதவ மினி பிரஸ் தேவை. (செகண்ட் ஹாண்ட்) விலை, இதர விவரங்களுடன் எழுதவும்.

அமைப்பாளர்,
"சேவா டிரஸ்ட்"
த. பெ. எண் - 80
மதுரை - 2.

(பாலம் பகுதி மூலம் தொடர்பு கொள்ளும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது.)

# பணம் பண்ணலாம் வாங்க!

**வி. கோபாலன்**

## வருமானத்துக்கு வேண்டாமே 'ரிடயர்மெண்ட்'!

யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியாவின் Linked Insurance Plan Scheme பற்றி முன்பே குறிப்பிட்டேன். கடந்த டிசம்பரில் யூ.டி.ஐ. அறிமுகப்படுத்திய புதிய திட்டம் Retirement Benefit Plan(RBP). இந்தத் திட்டத்தில் பணம் போடுபவர்களுக்கு இன்கம் டாக்ஸ் சட்டத்தின் எண்பத்தெட்டாவது பிரிவின் கீழ் வரிவிலக்கு உண்டு.

இந்தத் திட்டத்தில் பல சௌகரியங்கள் இருக்கின்றன. இதில் குறைந்தபட்சமாக பத்தாயிரம் ரூபாய் முதலீடு செய்ய வேண்டும். இந்தத் தொகையை (அதிகபட்சமாக) இருபது தவணைகளில் செலுத்தலாம். பதினெட்டிலிருந்து ஐம்பத்திரண்டு வயதுள்ள யாரும் இதில் முதலீடு செய்யலாம். முதலீடு செய்யும் தொகையைப் பொருத்து ஒரு குறிப்பிட்ட தொகை நமது 58ஆவது வயது முதல் மாத வருமானமாகக் கிடைக்கும்.

நமது வருமானம் மற்றும் கையிருப்பைப் பொருத்து தவணைகளை ஓராண்டு காலத்துக்குள் எப்போது வேண்டுமானாலும் செலுத்தலாம். குறிப்பிட்ட தேதிக்கு முன்னர் கட்ட வேண்டும் என்ற கெடுபிடி இல்லாததால் திணறாமல் செலுத்தி விட முடியும்.

வயதுக்கும் முதலீட்டுத் தொகைக்கும் ஏற்ப ஐம்பத்தெட்டாவது வயதில் கிடைக்கக் கூடிய மாத வருமானத் தொகை விவரங்களைப் பாருங்கள்:

(ஒரே தவணையில் பணம் செலுத்தினால்)

| வயது | முதலீட்டுத் தொகை | மாத வருமானம் |
|---|---|---|
| 26 | ரூ. 10,000 | ரூ. 3758 |
| 35 | ரூ. 10,000 | ரூ. 1355 |

(இருபது தவணைகளில் செலுத்தினால்...)

| வயது | முதலீட்டுத் தொகை | மாத வருமானம் |
|---|---|---|
| 26 | ரூ. 500×20 தவணைகள் | ரூ. 1572 |
| 35 | ரூ. 555×20 தவணைகள் | ரூ. 611 |

(குறைந்த வயதில் திட்டத்தில் சேர்ந்தால் வருமானம் அதிகம்!)

மாத வருமானத் தொகை இறுதிக் கணக்கில் சற்றே கூட/குறையப் போகலாம். ஆனால் ஓய்வூதியம் உறுதி என்பதுடன் எழுபது வயதை எட்டியதும் முதலீட்டைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். அதற்கு முன்னர் திரும்பப் பெற விரும்பினால் பத்து சதவிகிதம் கழித்துக் கொண்டு தருவார்கள்.

நமக்கு ஐம்பத்தெட்டு வயதாகும் போது, 3758 ரூபாயின் மதிப்பு என்னவாயிருக்கும்? மின்சாரக் கட்டணத்துக்காவது போதுமானதாய் இருக்குமா? என்றெல்லாம் யோசனை வருகிறது இல்லையா?... வருமானமே இல்லாத காலகட்டத்தில் அந்தத் தொகை வரப்பிரசாதமாக இருக்கும் என்பதில் சந்தேகம் இருக்க முடியாதே!

வரி விலக்கு அளிக்கும் மற்றொரு சேமிப்புத் திட்டம் PPF- Public Provident Fund. இதன் கீழ் நாம் ஏதேனும் ஒரு ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா கிளையில் ஒரு பி.பி.எஃப் கணக்கை ஆரம்பிக்க வேண்டும். குறைந்தபட்சமாக நூறு ரூபாய் செலுத்தி ஆரம்பித்து, ஒவ்வொரு வருடமும் அந்த குறைந்தபட்ச தொகையையாவது செலுத்திவர வேண்டும். ஒரு வருடத்துக்குள் எப்போது வேண்டுமானாலும் கட்டலாம். இந்தத் திட்டத்தில் முதலீடு செய்யப்படும் தொகைக்கு அரசாங்கம் வட்டியை அதிகரித்துக் கொண்டே வருகிறது. தற்போது 12 சதவிகிதம் வட்டி தருகிறது இந்திய அரசு.

ஓராண்டு காலத்திற்குள் தவணைகளை எப்போது வேண்டுமானாலும் செலுத்தும் வசதி RBP, PPF இரண்டிலுமே உண்டு. ஆனால் PPFஇல் மாத வருமானம் கிடையாது. ஒன்றுக்கு மேற்பட்ட RBPக்களில் ஒருவர் முதலீடு செய்யலாம்; ஆனால் ஒரு PPFகணக்கு ஆரம்பித்தால் அதில்தான் தொடர்ந்து பணத்தைச்



**பிரிந்தவர்களைக் கண்டுபிடிங்கள் - விடைகள்...**

1. வி.பி. சிங்
2. டி. ராஜேந்தர்
3. அர்ஜுன்சிங்
4. திருநாவுக்கரசு
5. வை. கோபால்சாமி

செலுத்திவர வேண்டும். RBPயில் போட்ட பணத்தை உரிய காலத்துக்கு முன்னர் எடுக்க நேர்ந்தால் கழிவு போக மிச்சம்தான் கைக்கு வரும். இப்படியின்றி PPFபேரில் கடன் வாங்கலாம் அல்லது அதில் ஒரு பகுதியை மட்டும் எடுத்துக் கொள்ளலாம்.

அவரவர் தேவைக்கும் வசதிக்கும் ஏற்ப PPFஅல்லது RBPயைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்று சொன்னபோது சிகாமணி இடைமறித்தார்: ''எதுக்குத் தேர்ந்தெடுக்கணும்? நான் இரண்டு கணக்கையுமே ஆரம்பிச்சடப் போறேன்... ஆஃப்டர் ஆல், எனக்குன்னு நான் செய்துக்கக் கூடிய சேமிப்பு இதுதானே...? மேலும், பத்து நாளைக்கு முன்னே பேப்பர்ல போட்டிருந்தாங்க... Inflationகுறைஞ்சுக்கிட்டு வருதுன்னு....''

சிகாமணி சொல்லி வாய் மூடுவதற்குள் அவர் மனைவி *சீறினார்:*

''ஆமாமாம் என்ன குறைஞ்சது! பருப்பு விலை குறைஞ்சதா? எண்ணெய், அரிசி, பால், காப்பி ஏதாவும் விலை குறைஞ்சதா...? எல்லாமே போன வருஷத்துக்கு இந்த வரும் விலை ஏறியிருக்கு... எப்படி inflation மட்டும் குறையுமுனு புரியலை....''

திருமதி சிகாமணியின் சந்தேகம் எல்லோருக்கும் இருக்கிறது. அரசாங்கம் விலைவாசியுயர்வின் அடிப்படையில் தான் பணவீக்கம் அல்லது inflationஐக் கணக்கிடுகிறது. பணப் புழக்கத்துக்கு ஏற்ற உற்பத்தி இல்லாதபோது (Too much money chasing too little goods என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள்) உற்பத்திப் பொருள்களின் விலை ஏறுகிறது. பொருள்களின் விலை ஏறிக்கொண்டேயிருக்க, பணவீக்கம் குறைந்து விட்டதாக அரசாங்கம் எப்படிச் சொல்ல முடியும்?

விஷயம் ரொம்ப சிம்பிள். அரசாங்கம் விலைவாசி உயர்வைக் கணக்கிடும்போது whole sale price index என்ற மொத்தம் வியாபாரக் குறியீட்டின் அடிப்படையில் தான் கணக்கிடுகிறது. இந்த குறியீடு பால், அரிசி, சர்க்கரை தவிர, துணிமணி, வீட்டு உபயோகப் பொருட்கள் போன்றவற்றின் விலையையும் உள்ளடக்கியது. கலர் டி.வி.யும், வாஷிங் மிஷினும், பாலியஸ்டர் துணியும் கணிசமாக விலை குறையும்போது, அரிசி, பருப்பு போன்றவை விலை ஏறுகின்றன. ஆனால் ஒட்டுமொத்தமாக பார்த்து சராசரி விலையுயர்வைக் கணக்கிடும்போது விலைவாசி குறைந்திருப்பதாகக் கணக்கு காட்ட முடிகிறது. இந்தக் கணக்கைக் கொண்டு பண வீக்கம் குறைந்துள்ளது என்று அறிக்கை விட முடிகிறது...

இந்தச் சோகத்தைச் சொல்லிவிட்டு 'பணம் பெருகும்' என்று போட்டு இந்த வாரத்துக்கான மாட்டரை முடித்தால் வாசகர்கள் சண்டைக்கு வருவார்கள். எனவே ஒரு 'குட் நியூஸ்' சொல்லி முடிக்கிறேன்:

ஷேர் மார்க்கெட்டின் வாட்ச்மேனாக விளங்கும் SEBI அமைப்பு இரண்டு வருடங்களுக்கு முன்னால் ஒரு புதிய விதியை ஏற்படுத்தியது. பங்கு மார்க்கெட்டுக்கு வரும் புதிய நிறுவனங்களின் ஷேர்கள், விண்ணப்பதாரர்கள் கேட்கும் ஷேர் எண்ணிக்கைக்கு ஏற்ப விகிதாசார அடிப்படையில்தான் வழங்கப்பட வேண்டும் என்பதே அந்த விதி. அதாவது, அதிக ஷேர்களுக்கு விண்ணப்பிப்போருக்குத்தான் ஷேர் கிடைக்கும். கொஞ்சமாகப் பணம் வைத்துக் கொண்டு குறைந்தபட்ச ஷேர்களுக்கு விண்ணப்பிப்போருக்கு ஏறக்குறைய நாமம்தான்! இதனால் நம் மிடில் கிளாஸ் விண்ணப்பதாரர்களுக்குத்தான் ஏமாற்றம் அதிகம். ஏற்கெனவே ஷேர் மார்க்கெட்டைப் பிடிக்குள் வைத்திருந்தவர்கள் தொடர்ந்து சக்கைபோடு போட்டார்கள்.

இப்போது SEBI இந்த விதியை மாற்ற முடிவு செய்திருக்கிறது. புதிய நிறுவனங்கள் பங்கு மார்க்கெட்டுக்கு வரும்போது, மொத்த பங்குகளில் ஒரு பகுதியை (சுமார் 50 சதவிகிதம் வரை) ஆயிரம் ஷேர்களுக்குள் விண்ணப்பிக்கும் சிறு முதலீட்டாளர்களுக்கென்று ஒதுக்கி வைக்க வேண்டும். இந்தப் புது விதியின் காரணமாக மிடில் கிளாஸ் முதலீட்டாளர்களுக்குச் சிறந்த கம்பெனிகளின் ஷேர்களை வாங்கும் வாய்ப்பு அதிகமாகிறதல்லவா...?

(பணம் கட்டாயம் பெருகும்!)

## அடுத்த இதழில்...

**●● கல்லூரிப் பறவைகள்!**

*– கவர் ஸ்டோரி*

# மறுபடியும் மரண தண்டனை!

●● "ஜயா, ஜாலி" என்று ஐக்கிய அரபு நாடுகள், குவைத், கட்டார், ப்ருனே, சிங்கப்பூர், பஹாமாஸ் ஆகிய எல்லா நாடுகளும் குதித்துக் கொண்டிருந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை. அவற்றிற்கு உலக வங்கி ப்ரமோஷன் கொடுத்திருக்கிறது. அடுத்த ஆண்டு தொடக்கத்திலிருந்து அவை "வளரும் நாடுகள்" என்ற பட்டியலிலிருந்து "வளர்ந்து விட்ட நாடுகள்" என்ற பட்டியலுக்கு மாறுகின்றன. நம் நாட்டுக்கு எப்போது இந்த உயர்வு கிடைக்கும் என்கிறீர்களா? ரொம்ப சிம்பிள். ஒரு சராசரி இந்தியனின் வருட வருமானம், தொடர்ந்து மூன்று வருடங்களுக்கு, 8,000 டாலர்களுக்குக் குறையாமலிருக்குமாறு பார்த்துக் கொண்டால் போதுமாம்! ஹும், நடக்கிற கதையா?

●● பெட்ரோல் பங்குக்குப் போய் "2, 2" அல்லது "1, 2" என்றெல்லாம் பெட்ரோல், எண்ணெய்க் கலவை விகிதத்தைச் சொல்லி வண்டி டாங்கை நிரப்பிக் கொள்கிறோம் இல்லையா? அதுபோலெல்லாம் சர்வதேச மோட்டார் பந்தயங்களில் கலந்து கொள்பவர்கள் தங்கள் இஷ்டத்துக்கு எரிபொருள் கலவையை தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியாது. அதற்கென்று விதிகள் உண்டு. அதை மீறி, தவறான கலவையைப் பயன்படுத்தியதற்காக இன்றைய நம்பர் 1 மோட்டார் பந்தய வீரரான ஷுமேஷர் தண்டிக்கப்பட்டிருக்கிறார். தண்டனை? சமீபத்தில் நடைபெற்ற பிரேஸில் க்ராண்ட் - ப்ரிக்ஸ் பந்தயத்தில் அவர் முதலாவதாக வந்தும், அந்த வெற்றி கணக்கெடுத்துக் கொள்ளப்படவில்லை. போதாக்குறைக்கு பந்தயத்தில் நுழையும் போது தமது எடை 77 கிலோ என்று அறிவித்த இவரைப் பந்தய முடிவின் போது எடை சோதனை செய்த போது 71.5 கிலோதான் இருந்தாராம். இதையும் விளையாட்டு அமைப்புக் குழுவினர் பெரும் குற்றமாகக் கருதுகின்றனர்!

●● பம்பாய் படத்தின் இந்தி உரிமையைப் பெற்றுள்ள அமிதாப்பச்சன் & கோ "பாண்டிட் க்வீனை (பூலான் தேவியின் வாழ்க்கை வரலாற்றை சேகர் கபூர் இயக்கிய படம்) விட சிறந்த படம். "ஷிண்ட்லர்ஸ் லிஸ்ட் (ஸ்பீல்பெர்க்கின் யூதர்களை நாஜிக்கள் படுத்திய கொடுமைகளை விளக்கிய படம்) படத்தின் தரத்தை எட்டும் இந்தியப் படம்" என்றெல்லாம் விளம்பரம் செய்து கொண்டிருக்கிறார்கள் - இங்கல்ல, பிரான்ஸில் நடைபெறும் "கேனஸ் திரைப்பட விழா"வில் திரையிடப்படும் அப் படத்துக்காக, அங்கு வெளியாகும் பத்திரிகைகளில்!

●● மரண தண்டனை நீக்கப்பட வேண்டும் என்ற கருத்து பல நாடுகளில் விவாதிக்கப்படும் இந்நாளில் பிலிப்பைன்ஸ் நாட்டில் இந்த தண்டனை முறை மீண்டும் அறிமுகப்படுத்தப்பட்டிருக்கிறது. என்றாலும் எந்த முறையில் மரண தண்டனையை நிறைவேற்றலாம் என்பதில் அதிகாரிகளுக்குக் கருத்து வேறுபாடு - மின்சார நாற்காலியா, விஷ வாயுக் கூடமா, மரணத்தை உண்டாக்கும் ஊசிமருந்தா என்பதில். கடைசி நேர நிலவரப்படி ஊசி மருந்துதான் அமுல்படுத்தப்படும் என்று தெரிகிறது; காரணம், அதுதான் 'சீப்'பான முறையாம்!

— ஜி.எஸ்.எஸ்.



# அழகாக ஓர் அத்தியாயம்



"சரியான பயந்தாங்குளி!"

ஜானகி குபுக்கென்று சிரித்தாள். அவள் சுபாவமே அப்படித்தான். எல்லா வற்றையுமே எளிதாக எடுத்துக் கொள் ளும் மனசு. அவள் என் மனைவியானது அதிர்ஷ்டம்தான் - நிச்சயமாய்!

"என்ன ரொம்பத்தான் சிரிக்கறே?"

"உங்க மீசையைப் பார்த்துத்தான்."

"ஏன்?"

செல்லமாய் இழுத்துத் திருகினாள். செல்லமானாலும் வலிக்கத்தானே செய் யும்.

''ஸ்! பொது இடம்'' என்றேன் வலியை மாற்றி எச்சரிப்பாய்.

"இருக்கட்டுமே. என் புருஷன்! மீசை யைப் பிடிச்சு இழுப்பேன்... அப்புறம் ம்ம்..."

வார்த்தை வராமல் தடுமாறினாள். அதைக் கண்டு என்னில் புன்னகை.

"ஆமா. இங்க சிரிச்சு என்ன பிரயோ ஜனம். பயந்தாங்குளி!"

"ஏய்...!"

- சற்று நேரம் மௌனமாய் காற்றை ரசித்தோம். காவிரிக் கரையின் சுகமான காற்று கோடை வெயிலுக்கு இதமாய் இருந்தது. அங்கங்கு சிறு கால்வாய் போல பிரிந்து தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. வெள்ளை வெளேர் மணல். தலையில் முண்டாசும், இடுப்பில் வேட்டியுமாய் நாலு இளைஞர்கள் எங்களைக் கடந்து சென்றனர். உடம்போடு ஒட்டிய ஈரப் புடைவையுடன் சரட், சரட் என்று ஒரு பெண் குளித்து முடித்து வீடு திரும்பிக் கொண்டிருந்தது.

"இவளை மாதிரி இருப்பாளா?" - திடீ ரென்று கேட்டாள்.

எந்த அழகான பெண்ணைப் பார்த் தாலும் ஜானகியிடமிருந்து வெளிப்படும் கேள்வி.

எல்லா பெண்களுமே அழகுதான். அதை அறிந்து ரசிப்பதற்கு ரசனை வேண்டும். இவள் மசாஜ் செய்து நீவி விட்ட ரேஸ் குதிரை போல இருந்தாள். அதற்கு மேல் அந்தப் பெண்ணை விமர் சிப்பது அநாகரிகம்.

"இல்லை ஜானு. இவளும் அழகு தான். ஆனால் அந்தப் பெண் தனி."

ஜானகியிடமிருந்து மீண்டும் சிரிப்பு.

"ஏய்...!"

"உங்க அப்பாவிடம் என்ன சொன் னீங்க?"

"எதைப் பற்றி?"

"அந்தப் பொண்ணைப் பார்க்கப் போயிட்டு வந்தப்புறம்?"

"பயமாயிருக்குப்பான்னேன்."

"ஏன் பயம்?"

ஜானகிக்கு அலுக்காத பேச்சு இது. நான் பெண் பார்க்கப் போன அந் தக் கதையை எத்தனையோ முறை சொல்லியாயிற்று.

''அவ அழகு என்னைத் தாழ் வுணர்ச்சி கொள்ள வைத்தது. இந்தப் பொண்ணைக் கட்டிண்டு ஆள முடி யுமான்னு என் மேலேயே சந்தேகம்..."

"அவ என்ன தேசமா ஆளுவதற்கு? பெண்கன்னா அஃறிணைப் பொருளா?"

"அது என்னமோ தெரியாது ஜானு. என் மனசுல அவளைக் கண்டதும் பிரமிப்பு, பரவசம், பயம், இவளுக்கு என்னை விட நல்ல, பர்சனாலிடியான புருஷன் அமையட்டும்னு வேண்டுதல், நான் அவளுக்கு முன்னாடி ஒண்ணுமேயில்லாதது போல உணர்வு."

"அவ்வளவு அழகா அவ?"

"நீயும் அழகுதான் ஜானகி. தென்றல் மாதிரியான குளிர்ச்சி உன் கண்ணுல, செயலிலே."

"அவ எப்படி? தென்றலா, சூறாவளியா?"

ஜானகி கேட்டதும், அவளின் உருவம் எனக்குள் விசுவரூபமெடுத்தது.

அதோ நடந்து வருகிறாள். குனிந்த தலையில் நெற்றிச் சுட்டி முன்புறம் ஆடுகிறது. அரக்குக் கலர் பட்டுப் புடைவை. இதோ, இந்த காவிரியின் வெண்மணல் நிறம். ஒருமுறை நிமிர்ந்து என்னைப் பார்த்தாள். பார்வையா அது. அப்பப்பா. இப்போதும் மெய்சிலிர்க்கிறது.

"தெய்வீக அழகு அது ஜானகி. அகிலாண்டேஸ்வரி சந்நிதியில் நிற்கும் போது, அம்பிகையின் தாழம்பூ பின்னல் பாவாடையும், காதில் பளிச்சிடும் தாடங்கமும், முகத்தில் வழியும் அருளும், அன்பும்... நம்ம மனசுல உள்ள நல்லது கெட்டதையெல்லாம் துடைச்சு எடுத்துட்டு பரப்பிரம்ம நிலையைத் தருமில்லையா...? அது போல உணர்ந்தேன் ஜானகி."

கனவிலிருந்து பேசுவது போல சுற்றுப்புறம் மறந்து, லயித்துப் பேசினேன்.

"ஒரு பெண்ணைப் பார்த்ததும் காதலும், காமமும் வந்தால், அவளோட குடும்பம் நடத்த முடியும். இந்த மாதிரி பிரமிப்பும் பக்தியும் வந்தா.. அவளை நான் கணவன்ற உரிமையோட, தொடவோ, பேசவோ நிச்சயம் முடியாது."

"அப்புறம் அவளை நீங்க பார்க்கவே இல்லையா?"

"இல்லை. பிரயத்தனமும் படலே."

"அவங்க வீட்டுலே நீங்க சொன்ன காரணம் தெரிஞ்சு பைத்தியம்னு சொன்னாங்களாமே?"

"போகட்டுமே" என்று தோளைக் குலுக்கிய என் கண்ணில் பட்டாள் 'அவள்'.

"ஜானு!"

இத்தனை உணர்ச்சிவசப்பட்டு நான் கத்திய தேயில்லை.

என் பார்வை சென்ற திசையில் நோக்கிய ஜானகியும் ஸ்தம்பித்தாள்.

இருவரும் சட்டென எழுந்து விட்டோம்.

ஆறேழு பேர் கூட்டமாய் வந்தனர். அவள் கழுத்தில் புதுத் தாலி. மஞ்சள் நிறம் பளிச்சிட்டது. அருகில் உரிமையாய் வருவது... மனசு துணுக்கென்றது.

"கல்யாணம் ஆனதும், காவிரியிலே ஜோடியாய் முழுகிட்டுக் கோயிலில் அங்கப்பிரதட்சணம் செய்ய வைக்கறதாய் வேண்டுதல். எத்தனை வருஷமாய்த் தட்டிக்கிட்டே போச்சு! இந்த ஊர் பெருமாளுக்கு வேண்டிக்கிட்டதும், உடனே வரன் தகைஞ்சு வந்துடுத்து. எல்லாம் அவன் செயல்!"

## கிருஷ்ணா

. பெண்ணின் அப்பா, மற்றொருவரிடம் பேசிக் கொண்டே கடந்தார். சம்பந்தி மாமாவோ?

அவள் அருகில் நடந்தவன்... கருப்பாய், குண்டாய், தொப்பையுடன், வழுக்கைத் தலை வேறு! இவனா? இவனா? அவளது கணவன். குடிப்பானோ? தொப்பையைப் பார்த்தால் சந்தேகமாயிருக்கிறது. நடையைப் பார் திங்கு, திங்கென்று, பூமி அதிர, அலட்சியமாய்...

"நீங்க சொன்ன மாதிரியே அழகுதான் அவ."

. ஜானகி கிசுகிசுத்தாள்.

ஆனால் எனக்குள் பரபரவென்று குற்ற உணர்ச்சி மனசு முழுதும் பரவி, கனமாகி, வலியைத் தர ஆரம்பித்தது.

"வாடி சீக்கிரம். என்ன அன்ன நடை போடறே? வெள்ளைத் தோலுன்னு திமிரா?"

ஆங்காரமாய் வெளிப்பட்ட வார்த்தைகளினால் சட்டென சங்கடமான அமைதி. அவள் தலை மேலும் குனிய, முகத்தின் உணர்ச்சிக்குத் திரை. புழுதியில் எறியப்பட்ட தெய்வச் சிலை.

இவ்வளவு சீக்கிரமாய்ப் புதுப் பெண்டாட்டியை அதட்டுபவன் இவனாய்த்தான் இருக்கும். கடவுளே, இவன் எப்படி இவளுடன் காலம் முழுதும் குடும்பம் நடத்தப் போகிறான்?

எதேச்சையாய் நிமிர்ந்தவளின் பார்வை ஓட்டம், என் மீது பட்டு நிலைக்க... அடையாளம் கண்டு விட்டாளோ? இருக்கும்!

அந்தப் பார்வையின் ஊடுருவலும், அதில் தெறித்த ரணமும்... அம்மம்மா!

ஊஹூம்! என்னால் மறக்க முடியாது இனி. சாகும் வரை என்னை உறுத்தப் போவது நிச்சயம்.

● எல்.எம். மங்கை, பல்லவன் நகர்.

*? காஷ்மீர் மருதி எரிப்பை முன் வைத்து பாகிஸ்தான் துக்க தினம் அனுசரித்தது பற்றி உங்கள் எண்ணம்?*

! முதலைக் கண்ணீர் என்று கேள்விப்பட்டிருக்கிங்கல்ல? - அதே!

● எஸ். ரோஜா, நாட்டரசன்கோட்டை.

*? நாகேஸ்வரராவ் வீட்டில் காந்தி தங்கி யிருந்தார் என்பதற்காக நினைவுச் சின்னம் ஆக்கச் சொல்லும் காங்கிரஸின் போராட்டம் உங்களுக்கு உடன்பாடா?*

! அது பின்னால் ஒரு கூடுதல் வசதிக்காக எழுப்பப்பட்ட பிரச்னை. முதல் பிரச்னை, சத்தியசீலர் வாழ்ந்த அந்த வீட்டை ஏரான கோல்மால் செய்து வாங்கலாமா என்பது. வருமான வரித்துறை டைரக்டர் ஜெனரலே, 'மூன்று கோடி பெறுமானமுள்ள வீடு - நிலம் 54 லட்சத்துக்கு விற்கப்பட்டது - சட்டத்தை ஏய்ப்பதன் மூலம்' என்று வருத்தப்பட்டிருக்கிறார். எனவே, கறுப்புப்பணம் எவ்வளவு கைமாறியிருக்கும் என்று ஊகிக்கலாம். இரண்டாவது, அதை வாங்கியவருக்கு அவ்வளவு பணம் எங்கிருந்து வந்தது என்ற பிரச்னை. ஆ.க. காந்தி வாழ்ந்த அந்த வீடு ஒரு கோடி கும்பல் வசம் போவதைவிட 'அதை நினைவுச் சின்னமாக்கலாம்' என்ற வாதத்தில் நியாயம்

## சு.சுவாமியைக் கைது செய்ய



• மூக்குடைப்பு!



• ஊக்க போனஸ்



• ஐயகோ!



• "எதிர்நீச்சல்"

உண்டு.

● ஆர். பிரகாசம், நல்லாலம்.

*? பஞ்சாயத்துத் தேர்தல் ஜூன் மாதம் நடக்குமா?*

! எந்த ஜூன்?

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

*? 'தமிழ்நாட்டில் சட்டம், ஒழுங்கு, அமைதி கெட்டுவிட்டது' என்கிறாரே, மு.க.?*

! இது மு.க. சொல்லியா தெரிய வேண்டும்? மூலைக்கு மூலை தெரிகிறதே!

● எஸ். கண்ணன், மதுரை.

*? இலங்கைப் பிரச்னைக்கும் காஷ்மீர் பிரச்னைக்கும் உள்ள வித்தியாசம் என்ன?*

! இந்தியக் கண்ணோட்டத்தில் முன்னது தற்காப்புப் பிரச்னை; பின்னது தன்மானப் பிரச்னை.

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

*? தலைமைச் செயலர் ஹரிபாஸ்கர் பதவி நீட்டிப்பு பற்றி....?*

! கட்சி ஊழியர் போல் அவ்வப்போது அறிக்கை விட்டதற்கு அம்மா அளிக்கும் ஊக்க போனஸ்.

● அர. மணிவண்ணன், ஆலந்தூர்.

*? சபாநாயகர் என்பவர் சகல கட்சிகளுக்கும் பொதுவானவரா? அல்லது ஆளும் கட்சிக்கு ஜால்ராவா?*

! இப்படி ஒரு கேள்வி எழுப்பப்படும் அளவுக்கு அந்தப் பதவியைத் தாழ்த்திவிட்டாரே சேடப்பட்டியார்! ஐயகோ! யாரிடம் சொல்லி அழ?

● ச. ப்ரியா, பொள்ளாச்சி.

*? எப்பவும் அரசியல்தானா, தமிழ் இலக்கியம் பக்கமே வரமாட்டீங்களா?*

! கேட்டால்தானே வரலாம்! குழந்தை இலக்கியத்தில் கொடி நாட்டிய வாண்டுமாமாவுக்கு சமீபத்தில் 70-வது ஆண்டு விழா நடந்தது. தமிழ் எழுத்தாளர் சங்கமும் வானதி திருநாவுக்கரசும் இணைந்து பாராட்ட, அவரது "எதிர் நீச்சல்" வாழ்க்கை வரலாறு நூல் வெளியிடப்பட்டது. கேட்ட அரிய தகவல்கள்: வாண்டு மாமா ஆரம்பத்தில் ஓவியர் ஆக ஆசைப்பட்டார். நன்றாகப் படம் வரைவார். சித்திரக் கதையின் பிதாமகர். உழைப்பில் தேனீ. சீரியஸான ஆபரேஷனுக்குப் பிறகு, தீவிர சிகிச்சைப் பிரிவில் இருந்த போதும்கூட, புருப் திருத்துவதை விடவில்லை!

● கே. சஞ்சீவி பாரதி, அவ்வையார்பாளையம்.

*? கோ-ஆப்டெக்ஸ் உலக லெவலுக்குப் போவது பற்றி...?*

! பெருமைக்குரிய விஷயம்தான். அதைச்

சாக்கிட்டு அதிகாரிகளும் அமைச்சர்களும் உலகப் பயணம் செய்தால் போதாது. அதன் வெற்றிக்குப் பின் உள்ள நெசவாளர்களுக்கு உலகளாவிய அங்கீகாரம் கிடைக்க வேண்டும்.

● **ஜெ. கண்ணன், சென்னை.** □

*? பேநசிரின் தந்தை பூட்டோ தூக்கிலிடப் படுவதற்குமுன் அவரைக் காப்பாற்ற இந்தியா அரசியல் ரீதியாகப் பெருமுயற்சி செய்தது. அதையெல்லாம் மறந்து போன பேநசிர் இந்தியாவுடன் விரோதம் பாராட்டு வது நியாயமா?*

! பாக் அதிபர் யாரானாலும் இந்தியாவுடன் விரோதம் கொள்வது மரபாகவே ஆகிவிட் டது. இதற்கு பாக் உள்நாட்டு அரசியலும் ஒரு காரணம். அதிபரின் மனம் சமாதானத்தை விரும்பினாலும் கூட, மற்ற எதிர்க்கட்சிகள் அதை, 'காஷ்மீரை விட்டுக் கொடுக்கிற துரோ கம்' என்று முத்திரை குத்தி அரசியல் ஆதாயம் தேடுவார்கள்.

● **டி. சந்திரன், ஈரோடு.**

*? தமிழக அமைச்சரவையில் முதல்வரை அதிகமாகக் காக்காய் பிடிக்கும் அமைச்சர் யார்?*

! காக்காய்களில் எந்தக் காக்காய் அதிகக் கறுப்பு என்று நீங்கள் சொல்லுங்களேன்!


• மறக்கலாமா?


• கறைபடிந்த கரம்


• கிண்டல் விளக்கம்


• வழுக்கி விழுந்தார்?

# ஏற்பாடுகள் நடக்கிறதே?

● **மாலதி சுகுமாரன், நாகப்பட்டினம்.**

*? பம்பாய் படம் வெற்றி சரி, ஷரார் ஏ செரீப் மசூதி எரிக்கப்பட்டது...?*

! ரோஜா, பம்பாய் போன்ற படங்களுக் கானஅவசியத்தை வலியுறுத்தும் மற்றொரு சோக நிகழ்ச்சி.

● **முத்து செந்தில்வாகனன், திருமருகல்.**

*? நீங்கள் யாருடைய ரசிகன்?*

! இந்த வாரம்: கலைமாமணி பட்டத்தை மறுதலித்ததற்கு, தம்முடைய 'வேதபுரத்து வியாபாரிகள்' நாவலின் சடையர் யுக்தி யையே பயன்படுத்தி, அற்புதமாக தினமணி நிருபருக்கு கிண்டலாக விளக்கமளித்துள்ள இந்திரா பார்த்தசாரதியின் பரம ரசிகன். சிரிப்பு அடங்க ரொம்ப நேரமாயிற்று.

● **ஜெ. மாணிக்கவாசகம், இடைப்பாடி.**

*? தடா சட்டத்தின் கீழ் சு.சுவாமியைக் கைது செய்ய ஏற்பாடுகள் மிக மிக வேகமாக நடக்கிறதாமே?*

! இந்த முறை சு.சுவாமி வழுக்கி விழுந்து விட்டார் என்றே தோன்றுகிறது. "தடா கைதி ரவியை நாடகமாடச் சொல்லி நான் தூண்டி விடவில்லை" என்பதோடு அவர் நிறுத்திக் கொண்டிருக்கலாம். 'ரவி என் வீட்டுப் பக்கமே தலைகாட்டியதில்லை; அவன் யார் என்றே தெரியாது' என்று கூறப் போக, இப் போது போட்டோ - நெகடிவுடன் - பழி வாங்கப் புறப்பட்டிருக்கிறது. சு.சுவாமிக்குப் பரிந்து அறிக்கைவிட்ட மு.க. வுக்கும் மூக்கு டைப்பு! இந்த இக்கட்டிலிருந்தும் சு.சுவாமி தப்பி வந்தால், அவர் நிஜமாகவே ஒரு சூப்பர் அரசியல்வாதிதான்!

● **என். முருகேஷ், பெருஞ்சேரி.**

*? பிரபாகரனை இந்தியாவுக்குக் கொண்டு வர அரசு முடிவு எடுத்திருப்பது பற்றி....?*

! சோனியா காந்தி, அர்ஜுன் சிங் கட்சிப் பக்கம் போய் விடாதிருக்க, இப்போது கால தாமதமாக எடுக்கப்பட்டுள்ள அவசர நடவ டிக்கை. இந்த அறிவிப்பால் பிரபாகரனைக் கைது செய்து கொண்டு வந்துவிட முடியாது என்றாலும் இந்திய அரசின் கொள்கையும் கருத்தும் உறுதி செய்யப்பட்டுள்ளன. ராஜீவ் மரணத்துக்குக் காரணமானவர் அல்லவா?

□ ரூ. 25 பரிசு பெறுபவர்:
ஜெ. கண்ணன்,
246, பதினோராம் தெரு,
அண்ணாநகர் மேற்கு,
சென்னை - 101.




# யார் அந்த சுடிதார் பெண்?

**கா**ங்கிரஸ் பிளந்து, அங்கே ஒரு கலாட்டா நடக்கவும், இங்கே அம்மா, அய்யாவை சகட்டுமேனிக்கு தாக்கி ஸ்டேட்மென்ட் விட்டுக் கொண்டிருக்கவும் இடையே சசிகலா விவகாரம் கூட ராவ்காருவின் செட்அப்தான் என்று கிசுகிசு கிளம்பவும் - எப்படியோ 21 ஆம் தேதி நரசிம்மரின் த.நா வருகை, பெரும் பரபரப்பை உண்டாக்கி இருந்தது. ராவ் என்ன பேசப் போகிறார், பேச்சில் அனல் பறக்குமா, ஆவி பறக்குமா என்றெல்லாம் கட்சிக்காரர்களும் பத்திரிகையாளர்களும் நகம் கடித்துக் காத்திருக்க, நரசிம்மர் வழக்கம் போல ராஜீவின் கனவு, செல்ல வேண்டிய பாதை, காங்கிரஸ் காரர்களின் கடமை என்று மோர்சாதப் பேச்சோடு முடித்துக் கொள்ள, சப்பென்று போய்விட்டது.

பேச்சு விவரங்களை, பேப்பரில் பார்த்திருப்பீர்கள். ஆகவே சில out of focus தகவல்கள் இங்கே :

●● மேடையில் குறுக்கும் நெடுக்குமாக, கையில் வாக்கி டாக்கியுடன் அலைந்து கொண்டிருந்த ஒரு சுடிதார் பெண்மணி அனைவர் கவனத்தையும் ஒரு சேரக் கவர்ந்தார். யார் அவர்? லத்திகா சரணா? அல்லது வேறுயாரும் புதிய காவலதிகாரியா? சின்னைப் பிய்த்துக் கொண்ட - பின் கிடைத்த தகவல் : பிரதமரின் பிரத்யேக பாதுகாப்பு அதிகாரியாம்! (பெண்மை வெல்கவென கூத்திடுவோமடா!)

●● பாண்டிச்சேரி சபாநாயகர் கண்ணன், திடீரென பத்திரிகையாளர் வரிசையில் வந்து உட்கார்ந்து விட்டார்.

"சபாநாயகரா இருக்கறதுனால அரசியல்வாதிகள் மத்தியில உட்கார முடியாது பாருங்க!" என்று கண்ணன் சொன்னதும், "நீங்க உட்கார்ந்து, எங்களை வெளியே அனுப்பிடப் போறீங்க!" என்றொரு பத்திரிகையாளர் சந்தேகமாக இழுக்க, "சும்மா வெளியே அனுப்ப அவர் என்ன சேடப்பட்டியா?" என்றொருத்தர் கமெண்ட் அடிக்க செமை கலாட்டா!

●● பிரதமரின் பேச்சை மொழி பெயர்க்க, ப. சிதம்பரத்தை, மேடைக்குக் கூப்பிட்டார்கள். ஆயினும் ப.சி. மேடைக்குப் போகவில்லை. (ஏன்?) நிலைமையை உணர்ந்து சட்டென்று குமரியார் மைக்கைப் பிடிக்க சலசலப்பு ஓய்ந்தது.

●● ஸ்ரீபெரும்புதூர் எம்.எல்.ஏ. போளூர் வரதன், வாழப்பாடி குரூப் என்பது தான் பரவலான பேச்சு. ஆனால் வரதன், பிரதமர் நிகழ்ச்சியில் கலந்து கொண்டது மட்டுமின்றி அவருக்கு நினைவுப் பரிசும் வழங்கியது இதர காங். காரர்களுக்கு ஆச்சர்யம் மற்றும் சந்தோஷம்.

— ப்ரியன்

படம் : கேமரா திருஞானம்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : வி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

பதிவு எண்: 26383 போன்: 583241




# கல்பதரு பெனிபிட் பண்டு லிமிடெட்

(கம்பெனிகள் சட்டப்படி பதிவு செய்து நிறுவப்பட்டது)
பதிவு அலுவலகம்: 134, ராசப்ப செட்டி தெரு,
(ஸ்ரீ கந்தகோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-600 003.

## பிக்சட் டிபாசிட் திட்டம் மாத வட்டிக்கான காசோலைகள் முன் கூட்டியே வழங்கப்படும்

| காலம் | 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வருட வட்டி வீதம் | 14% | 15% | 16% | 17.5% | 18.5% | 19% | 19.5% | 20% * |



## குபேரன் வைப்பு திட்டம்

வட்டி 21% குறைந்த அளவு டிபாசிட் ரூ. 50,000/- காலம் : 5 வருடம்.
மாத வட்டிக்கான செக்குகள் முன்னதாகவே வழங்கப்படும்

## அமுத சுரபி டிபாசிட் திட்டம்



| டிபாசிட் தொகை | காலம் | கிடைக்கும் தொகை |
|---|---|---|
| ரூ. 5,600 | 15 வருடம் | ரூ. 1,00,000 |
| ரூ. 7,000 | | ரூ. 1,25,000 |

## கல்பதரு மணிபேக் திட்டம்

அ) பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்த வேண்டும்.
முதல் 5ம் ஆண்டு முடிவில் நீங்கள் செலுத்திய ரூ. 6000/-ஐ பெறுவீர் !
2வது 5ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/-ஐ பெறுவீர் !
3வது 5ம் ஆண்டு முடிவில் ரூ.51,000/-ஐ பெறுவீர் !

## முதியவர் நலத்திட்டம்: வயோதிகர் விதவைகள் கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

| தொகை | காலம் | வட்டிவீதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 12 மாதங்கள் | 20% |
| ரூ. 10,000 கீழ் | | 19% |

## சேமிப்பு டிபாசிட் திட்டம் - 10% வரை வட்டி வழங்கப்படும்



**கடன்**

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி விகிதம் ரூ.1.95

அலுவலக நேரம் : காலை 8.30 முதல் 12.30 வரை மாலை 2.00 முதல் 6.00 வரை ஞாயிறு காலை 8.30 முதல் 12.30 வரை

பயன் பெற ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். (செவ்வாய் விடுமுறை) பாதுகாப்பு • சேவை • சுபிட்சம்

